



வாழ்க தமிழ்.

# தமிழ்ப் பொழில்

துணர் ௩௧ மலர் ௧—௩

மன்மத—சித்திரை—ஆனி.

கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை.

பொழிற்றொண்டர் :

இராவு சாகேப். S. சுயம்பிரகாசம், B. A., B. L., M. L. A.



## உள்ளுறை.

துணர் ௩௧. —— மலர் ௧—௩.





# தமிழ்ப் பொழில்.

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு.

| துணர் ௩௧ | திருவள்ளுவர் யாண்டு ௧௯௮௫-௮௬<br>மன்மத சித்திரை—ஆனி<br>1955 ஏப்ரல்—ஜூன். | மலர் ௧-௩ |
|---|---|---|


## பொழிலும் போற்றுவாரும்.

கரந்தைத் தமிழ்ச் சங்கம் தோன்றி நாற்பத்து நான்கு யாண்டுகள் ஆகின்றன. இந்த நாற்பத்து நான்கு யாண்டுகளில் சங்கம் தமிழுக்குத் துறைதோறும் செய்துவந்த தொண்டுகள் பலவாகும். அவற்றுள் "தமிழ்ப் பொழில்" என்ற திங்கள் வெளியீட்டைத் தொடர்ந்து நடத்தி வருவதும் ஒன்றாகும். தமிழவேளவர்கள் இருந்தபோது தமிழ்ப் பெரும்புலவர் பலரின் தொடர்பு சங்கத்தோடு நெருங்கியிருந்தது. சங்கத்தில் நிகழ்ந்த ஆண்டு விழாக்கள் முதலிய சிறப்புக் காலங்களில் விரிவுரையாற்றவும், பொழிலின்கண் கட்டுரை வரையவும் செய்து தமிழ் நாட்டுக்கு அறிமுகப்படுத்தப்பட்ட அறிஞர் பலர். அவர்களெல்லாம் உண்மையாகவே தமிழை அரிதின் முயன்று ஆய்ந்து வெளியிட்ட கருத்துக்கள் தமிழுக்கும் தமிழருக்கும் பெருமையளிப்பதாக இருந்தன. இன்றும் தமிழின் சென்றகால வரலாற்றை ஆய்வோர் தமிழ்ப் பொழிலைத் துணையாகக் கொள்ளுவதும், மேற்கோள் காட்டுவதும் வழக்காறென்பதை அறிஞர் யாவரும் அறிவர். இவ்வாறு சிறந்து விளங்கிய பொழிலின் இன்றைய நிலைமை என்ன? இதனை நன்கு சிந்தித்து ஆவனவற்றை செய்ய வேண்டுவது தமிழருடைய கடமையாகும்.

தமிழ்ப் பொழில் அச்சகத்தின் மாற்றத்தாலும், இன்னுஞ் சில தவிர்க்கமுடியாத காரணங்களாலும் திங்கள் தோறும் வெளிவரமுடியவில்லை. அச்சகத்தைப் பொறுத்த வரையில் இனி எந்தவிதமான இடையூறும் இல்லை. இனித் திங்கள்தோறும்

நம் பொழில் வெளிவரும். ஆயினும் பொழிலின் நிலைமை இந்த அளவில் வெளிவருதல் போதாது. பண்டை நாட்களில் இருந்த நிலைமையோடு ஒத்த தகுதியில் வெளியிடுதல்வேண்டும். இன்னும் கூறின் பொழில் முன்னினும் சிறந்த அளவில் வெளி வருதல்வேண்டும். 'தமிழ்ப் பொழில்'' இலக்கியமும், இலக் கணமும் படித்த சிலருக்குத்தான் உரியது என்ற நிலை மாற வேண்டும். தமிழிடத்து அன்புடையார் யாவரும் பயிலத்தக்க ஓர் உயரிய நிலைக்குக் கொண்டுவருதல் வேண்டும். தமிழ் மொழியானது தமிழ் நாட்டில் வாழும் மக்களுக்கெல்லாம் உரிமை யுடையது. தமிழ் இலக்கியமும் பிறவுமெல்லாம் தமிழ் மக்க ளுடையனவே. ஆகவே அவற்றைப்பற்றி எழுதும் எந்த செய் தியும் தமிழ் மக்கள் மனங்கவரத்தக்க முறையில் அமைதல் வேண்டும்.

'தமிழ்ப் பொழில்' சில கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு தோன்றியது. அந்த கொள்கைகட்காகவே அது இன்னும் உயிரோடு போராடிக் கொண்டு தன் தொண்டைச் செய்து வருகின்றது. கொள்கை ஏதுமின்றி வாணிக முறையில் சிலர் கூடித் தொடங்கியதன்று. "நல்ல தமிழ்மொழியில் பேச வேண்டும். எழுதுதலும் வேண்டும். வடமொழி கலந்து பேசு தலும் எழுதுதலும் தமிழ் மொழியின் ஆக்கத்தைக் குறைக்கும். தமிழர் வரலாறு காணமுடியாத காலந்தொட்டு நல்ல நாகரிகம் கொண்டு வாழ்ந்தவர். அவர்கள் நாகரிகம் தனித்த சிறப்பு வாய்ந்தது என்பன போன்ற கொள்கைகளைத் தோன்றிய காலந் தொட்டு நிறைவேற்றி வந்துள்ளது. இவைகளை விளக்கப் பொழிலில் இடம்பெற்ற கட்டுரைகள் மிகுதியாக வுண்டு.

இவ்வாறு கொள்கையை அடிப்படையாகக் கொண்டு எழுந்த பொழிலுக்கு இக்காலத்தில் எவ்வளவோ துறைகள் காத்துக் கிடக்கின்றன. தமிழ் மொழியை அரசியல் மொழியாக ஆக்கிக் காணவேண்டுமென்ற அவா இன்றைய தமிழர் ஒவ்வொ ருவர் உள்ளத்திலும் எழுந்துள்ளது. ஆனல் அதற்கான வேலைகள் எண்ணத்தின் அளவுக்கு நடைபெறவில்லை என்றுதான் கூற வேண்டும். அடுத்தபடியாகத் தொடக்க நிலைக் கல்விமுதல் பல்

கலைக் கழகப் படிப்புவரை தமிழ் மொழியைக் கொண்டுவரவேண்டு மென்று சென்னை மண்டில அரசியலார் முடிவுக்கு வந்து, அதற் காவன செய்யும் முயற்சியிலும் ஈடுபட்டுள்ளனர். இவ்வாறு பலவகையான துறைகள் காத்துக் கிடக்கின்றன. இக் காரியங் களில் 'பொழில்' இயன்றதைச் செய்ய கட்டுரை, ஆய்வுரை எழுதும் அன்பர்களின் ஒத்துழைப்பு இன்றியமையாததா கின்றது.

இப்பொழுது நம்நாட்டு அறிஞர் சிலர் தவறான கருத்துக் கொண்டுள்ளனர். தாங்கள் பல ஆண்டுகளாக வருந்திப் பயின்ற துறை பற்றிய ஆராய்ச்சியை வெளியிட விரும்புவதில்லை. பொருட்டுறை பயின்ற அறிஞர் அதனைத் தமிழில் ஆக்கித் தரவோ அல்லது அதனொடு தொடர்பான செய்திகளைத் தமிழில் தர முயல்வதோ முறையாகும். ஆனால், அவர் அத னைச் செய்யார். காவியம் எழுத முயல்வர். அதுபோலவே, இலக்கிய ஆராய்ச்சியுடையோர் அதனை விடுத்துப் பிற துறை களை எழுத முயலுகின்றனர். இந்த மனப்பான்மை ஒழிய வேண்டும். யாருக்கு எந்தத் துறையில் பயிற்சியும் புலமையும் உண்டோ அத்துறையினைத் தெளிவாக வரைந்துதவின் நாட் டுக்கு மிக்க நன்மை பயப்பதாகும்.

தமிழ்ப் பொழிலின் இன்றைய நிலைமையில் ஏனைய திங்கள் இதழ்கள்போலக் கட்டுரையாளர்கட்கு பொருளுதவி செய்தல் இயலாது. பண்டைய நாளில் கட்டுரை முதலியன வரைதல், அவரவர்கள் புலமைத் திறத்தையும், கொள்கைகளையும் விளக்கு வதாக அமையும். ஆனால் இன்று அவ்வண்ணமில்லை. பெய ருடையார் சிலர் கட்டுரைகள் வந்தால் போதும். அது சிறந்த ஆராய்ச்சியாக இருக்கவேண்டுமென்பதில்லை. அல்லது புலமைத் திறத்தை விளக்குவதாகவும் அமைய வேண்டுவதில்லை. எப்படி யாயினும் ஏதாவது பொருள் கொடுத்து வெளியிடும் தாள்கள் உள்ளன. இத்தகைய இழிவான கொள்கையை நாம் மேற் கொள்ளாவிட்டாலும், கட்டுரையாளர்கட்குப் பொருள் உதவு வது சரியல்லவென்று நாம் கூறவில்லை. ஓரளவு உதவிசெய்ய வேண்டுவது நியாயம் என்பதை உணருகின்றோம். ஆனால்

அதற்கேற்ற நிலையில் பொருள் வருவாய் உடையதாகப் "பொழில்" வளரவில்லை. இனி ஆங்காங்குள்ள பொழிலன்பர்கள் பல உறுப்பினர்களைச் சேர்த்துவிட வேண்டுகின்றோம். உறுப்பினர்கள் மிகுதியாக இருந்தால்தான், இன்னும் நல்ல முறையில் வெளிவர ஆவன செய்யமுடியும். ஆகவே இதனைக் கண்ணுறும் அன்பர்கள் தங்களாலியன்ற அளவுக்கு உறுப்பினர்களைச் சேர்த்துதவுமாறு கேட்டுக்கொள்கின்றோம்.

---

## வருந்துகிறோம்.

கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் வாழ்நாள் உறுப்பினர்களுள் ஒருவரும், நல்ல தமிழன்பரும், கடல் கடந்து அலுவல் செய்தவரும் தமிழ் மொழியின் எழுத்துக்களைப் பற்றிய நல்ல ஆராய்ச்சி செய்து 'செந்தமிழ்ச் செல்வி' வாயிலாகவும், 'தமிழ்ப் பொழில்' வாயிலாகவும், சொற்பொழிவு மூலமாகவும் வெளியிட்ட பெருந்தகையும், தமிழ்ச் சொற்களின் வளங்குறித்த நல்ல ஆராய்ச்சியை "ஆங்காங்கே" என்னுந் தலைப்பில் தமிழ்ப் பொழிலில் தொடர்ந்து வெளியிட்டுவந்த நல்லறிஞரும் விலங்கியல் மருத்துவ வல்லுநரும் ஆகிய திருவாளர், ஈப்போ, **கோ. தியாகராச பிள்ளையவர்கள் G. M. V. C. (20—6—55)**ல் இயற்கை யெய்திமை குறித்து மிக வருந்துகின்றோம். அன்னார் குடும்பத்திற்கும் நமது ஆழ்ந்த வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.

**பொழிற் றொண்டர்.**

சென்ற துணர் பக்கம் 252 தொடர்ச்சி.

# "கலையமுதம்"

இவ்வாறு பண்புகளும் உடையவர்களையே அடியேன் ஆத்திகர்கள் என அழைக்கின்றேன். ஏனையோர்களை நாத்திகர்கள் எனப் பெயரிட்டுக் கூறலாம். திருவள்ளுவர் நாத்திகர்களை கூர்மையான அரத்திற்கு ஒப்பிட்டுக் கூறியுள்ளார், இரும்பையும், செம்பு பித்தளை முதலிய பல உலோகங்களையும் அராவித்தள்ளும் அரம் மிகக் கூர்மையுடையது. ஆனல் மழுங்கிப்போனதும் எதையுங் கூர்மைப்படுத்த உதவுகிறதில்லை. எனவே அதனுடைய தன்மை சின்னாள் உதவிப் பின் பன்னாள் உதவாப் பொருளாக ஆவதே என்க. அவ்வரம்தான் உபயோகப்படுத்தும் காலத்தும் பிற பொருள்களை (செம்பு, பித்தளை, இரும்பு, வயிரம், முதலிய பலவற்றை)ச் சிறுகச்சிறுகத் தூளாக்கிக் கொட்டி வீழ்த்த உதவுமே அன்றி வேறில்லை.

பிறகு மரக் கட்டையைப்போல் யாவர்க்கும் பயனற்று இருக்க நேரிடுகிறது. அஃதொக்கவே மக்கள் பண்பிலாதவர்கள் செய்யுஞ் செயல்கள் சிற்சில நேரங்களில் அனுகூலமாகத் தோன்றுமேனும் முடிவில் பெரிய நாத்திகத்தையே விளைவிக்கும். இதில் யாதும் ஐயம் வேண்டாம்.

மரக் கட்டையை என் வள்ளுவர் இகழ்கிறார்? மரமானது எவ்வளவோ சிறந்த பொருளாக நமக்குப் பயன்படினும், அதனை ஓர் படைக்கருவியாகவோ, அல்லது போர்க்கருவியாகவோ கொண்டுசென்று போரினை வெல்வதற்கில்லை என்ற காரணமாகுமென்றே நான் நினைக்கின்றேன். ஆதலின் மக்கட்பண்பில்லாதவர்கள் செய்யுந் தொழிலளவாகக் கூர்மைப்பட்டிருப்பினும், மழுக்கைத் தலைப்பெற்றுள்ள மரக் கட்டையைப்போலாவார்கள் முடிவில் என்றுதான் திருவள்ளுவர் கூறுகிறார்.

"அரம்போலும் கூர்மையரேனும் மரம்போல்வர்
மக்கட் பண்பில்லா தவர்".

அன்பும் சதா நிலைத்திருக்கவேண்டும். அதற்கு வேலி யிட்டதாக நாணமும் அமைந்திருக்கவேண்டும். கட்டுப்பாடு விதிகப்பட்டதாகக் காட்சியளிக்காதிருக்கக் கண்ணோட்டமுந் தேவை. கண்ணோட்டம் அல்லது பிறர்பால் அவர் நிலைகண்டு இரங்கித் தயைபுரிதலானது மேலோர் கீழோர் ஆய பலரிடத்தும் ஒப்புரவாக இருத்தல் வேண்டும். ஆக அன்பும் நாணும் ஒப்புரவும் கண்ணோட்டமும் கூடிய வழி ஒருவன் உள்ளூற வெறும் புகழுக்காகவோ, தற்செருக்கால்தான் எண்ணிய ஒன்றைக் கைவரப் பெறுதற்காகவோ இருக்கலாமல்லவா? அவ்வாறாகாதிருக்கவே "வாய்மை" யாகவே இருக்கவேண்டும் என வள்ளுவர் கூறுகிறார்.

இவ்வாறாகிய பண்புகளை நாம் வளர்த்துக்கொள்ள வேண்டின் நம்மைச் சூழ்ந்துள்ள வஞ்சனை, பொறாமை, சமத்துவமின்மை, ஆட்சியின் மிரட்டல் முதலிய பல தீய குணங்கள் அகலல் வேண்டும். ஆள்வோரும் ஆளப்படுவோரும் நல்ல மனப்பான்மையுடன் வறுமை; வெறுமை முதலியன நீங்கி வாழ வேண்டும். சமக்கல்வி, (சமத்துவக் கல்வியல்ல) சம வாழ்வு, சமத்தொண்டு, சம சகிப்பு முதலிய பல்வேறு பண்புகளை வளர்க்கவேண்டும். ஆதலின் அதற்காக எது வேண்டுமாயினும் அரசியலாரும் செல்வந்தர்களும் அறிவினால் மேம்பட்டவர்களும் தொழிலாற்றலாம். திருவருள் துணை செய்யுமாக.

முருகன் நாம் வழிபடுந் தெய்வம். மேனாட்டு மக்களும் அவரை வணங்க ஆரம்பித்துவிட்டனர். முருகன் வேறு, இறைவன் வேறு என நாம் அறிந்திலம். எனவே இறைவனின் பண்புகளை எல்லாம் நம் முருகன் மாட்டுக் காண்கின்றோம்.

கலையமுதக் கண்ணோடு ஸ்ரீ குமாரகுருபரசுவாமிகள் முருகனைக் காண்கின்றார்கள். முருகன் லீலைகள் பல. எல்லாம் அவனுக்காகவல்ல. நமக்காகவே என்க.

வள்ளி ஓர் கற்பிற்சிறந்த நங்கை. முருகனைத் தவிர தன் மனத்திடை யாரையுந் தேர்கிலள். முருகனும் அவளையே மிகவும் காதலித்தான். "வள்ளி நாயகன்" என்ற பெயரும் அவ

86-ஆம் பக்கம் பார்க்க

# இடுகாடு

ந. செகதீசன்.

இடுகா டென்னும் இனியநன் காடே!
படுதிரை வையத் தினிவருங் காலம்
உன்பா லுயிர்ப்புட னிலங்கக் கண்டேன்
மன்பதை உய்ய நன்னெறி பலவும்
சாப்பல் உருவில் சமாதி வடிவில்
ஓம்பிநீ காத்தல் உவப்புமிக எனக்கே!
இல்லார் உடையார் இழிந்தோர் உயர்ந்தோர்
கல்லார் கற்றோர் என்ற பொல்லா
நெறிகளுந் பாலிலைப் புரைதீர் காடே!
செறிந்த அன்பால் சீர்மிகு வன்பால்
விரும்பின ராயினும் விரும்பா ராயினும்
பெருமை சேரும் சாவெனும் கரத்தால்
உலக மக்களை உவப்புடன் அழைத்தி!
அலகில் நலஞ்சால் அமைதி யாழியால்
உலகினைக் கவர்ந்த உனதரு நிழற்கீழ்
அந்தீங் கிளவியால் அழைத்தன குயிலே!
விந்தை சேர்காட்சி வியன்பெருங் காடே!
அருகுள மரமோ அகமிக மகிழ்ந்து
நறுமண மலரால் உன்னடி வருடி
நிற்றல் கண்டேன் நெடிதுள மூவந்தேன்
சொற்றிறம் வென்றேன் சோர்வில் காடே!
தண்ணளி சேரு முன்தாவில் கோலால்
மண்மகள் தன்மனம் மகிழ்ந்த னளாகி
மணிமனை பலவும் மாசறு திறத்தால்
அணியுறச் சமைத்த வாங்குச் சமாதி
நின்றன பலவே கண்டனன் யானே!
தென்றல் மகிழ்ந்து சாம்பல் ஆடி
உன்றன் கோலின் உயர்வினைப் பாடி
மாதிரம் தோறும் ஏகுதல் கண்டேன்!
கோதில் உன்றன் கோனெறி காண

ஆவல் கொண்டேன் அதனல் அன்பே !
மேவி யுன்பால் தங்கியுன் சீரை
கண்டு யீண்டு மீண்டும் திரும்ப
மண்டிய வேட்கை மதித்தனை நீயும்
ஏற்றல் வேண்டும் ஆற்றல்சால் காடே !
போற்றுதற் கொல்லா உன்புரைதீர் உலகைக்
காணிய வந்தஎன் மாண்புடை நண்பர்
எனினும் மீண்டிலர் இயம்புதி எனக்கே !
துன்னருஞ் சீருடை உன்னரு முலகிடை
மன்னினர் கொல்லோ மயங்கி னராகி !
ஒல்காப் புகழுடை உயர்பூங் காவே !
அல்கா வுந்தன் அருமை காண
நசைமிக வுடையேன் ! நண்ணுமுன் சீரை
இசைத்தலும் விழைந்தேன் எங்கணும் சென்றே !
வஞ்சமும் சூதும் வடுமிகு நெறியும்
அஞ்சி வாழும் அடிமை வாழ்வும்
துஞ்சிட உன்பால் தஞ்சம் புகுந்து
எஞ்சலில் நலன்க ளெய்திய எந்தன்
முன்னோர்க் காண முன்னிய என்னுளம்
இன்னல் போக்கி இன்பம் கொண்டிட
கன்னல் தமிழால் வேண்டுவன் அருளே !
ஏகாச் சிறப்பி ணியல்பெருங் காடே
ஈகுவை எனக்கே ஏத்துவன் பலவே !





# பாரி.

ச. பாலசுந்தரம்.

## காட்சி 1.

[ பாரியின் அரசவையில் கபிலர் முதல் யாவரும் வீற்றிருக்கின்றனர். பாரி ஓலக்க மண்டபத்திற்கெழுந்தருளுகிறான்]

**கட்டியக்காரன் :-**
நிலமகள் மனமகிழ் நேர்மிகு செங்கோல்
கலைமகி ழுறவோன் கைவண் பாரி
வருகிறார் வருகிறார் வலமுற வருகிறார்.

**எல்லோரும் :-** வாழ்கநம் மன்னர் ! வளர்கதம் செங்கோல் !

**கபிலர் :-** வாழ்க நம்பாரி வளமெலாம் சிறக்க !

**பாரி :-** அமருக புலவ ! அருமதி அமைச்சர்காள் !
அமருக ! வென்றி வீரர்காள் அமருக !
அன்புடை யவையோர் யார்க்குமென் நன்றி,

**வாயிலோன் :** இன்புடை அரசே ! ஏழையின் வணக்கம்
வெற்றிகொள் மன்னவ ! வேற்றுநாட் டவராம்
குன்றிய உடலினர் குறிக்கோ ளுடையர்
நின்திறம் நாடிய உளத்தினர் வாயிலில்
நின்றுளர் நின்பணி வேண்டுவல் வணக்கம்.

**பாரி :** நன்று நன்றுநீ சென்றவர்க் குற்றநல்
உணவும் உடையும் உதவுக சோர்வவர்த்
தணந்தபின் அவைக்களம் தருக ! நீசெல்க !

[அவன் போகிறான் பாரி அவையை நோக்கி]

சிந்தை களிப்புறத் தேன்சுவை தருஉம்
பைந்தமிழ் அன்னையின் பண்புடை மக்களாய்த்
திகழ்தரும் புலவர்காள் ! சிறியேன் செல்வழித்

தீங்கினை அகற்றித் திருத்தக உய்க்கும்
பாங்குள அறிஞர்காள்! பறம்பு நாட்டவர்
வளம்படப் பலவழி வகுத்தநற் றிறலீர்!
உளங்கொளச் செந்நெறி உதவுக! நாட்டின்
குறையினை எற்கெடுத் தியம்புக கொற்றவன்
முறையினைக் கூறுக முயன்றுசெய் வேன்யான்.

**நன்மொழியார் :-** இறையவ னருளால் இனிமைசேர் பறம்பிற்
குறையுள தேலது தீவினைக் குறைவே.

**சேனைத் தலைவர் :-** போரிலாக் குறையால் புயவலி வீரர்கள்
மூரிவெங் களிற்றொடு மோதுகின் றனரே.

**அமைச்சர் :-** இல்லந்தோறும் இரப்பவரில்லா
வல்லதோர் குறையும் மலிந்தது நாட்டில்
வழக்கிலாக் குறையால் வல்லவையோர்கள்
உழைப்பிலை என்றே உறங்குகின் றார்கள்

**ஊர்க்காவலர் :-** கள்வோ ரின்மையின் காவலர் குறையும்

**மருத்துவன் :-** கொள்வோரின்மையின் மருத்துவர் குறையும்
நிறைந்துள நிருபநின் நெடும்புகழ் வாழ்க!

**பாரி :-** வன்பகை இன்றிநம் வளமார் நாடு
இன்புடன் வாழ்வதே எம்முடை விருப்பம்

**நன்மொழியர் :-** மூப்பெரு மன்னரும் இப்புவி வாழ்வினைத்
தப்பிட நினைப்பரோ? தாணியில் மற்றொரு
வயவரும் உளரோ வாழ்வினை இழக்கக்?
கயவரும் விரும்பார் பறம்பொடு பகையை

**பெருநாவலர் :-** ஆளியை எதிர்த்தொரு ஆடுசெல் வுறுமோ?
கோளரி ஏறினைக் குறுநரி எதிர்க்குமோ?
நெருப்பினைப் பஞ்சுரு நெருங்குதல் உண்டோ?
பொருப்பினைச் சுண்டெலி போழ்வது போலுமால்
மன்னவ! நின்னொடு மாறுறு வாரிப்
பொன்னுல கெங்கணும் போந்தவ ரில்லைகாண்

[பாணனைக் காவலன் அழைத்து வருகின்றான் பாணன் வணங்கி]

பாணன் : குடரொடு முடக்கிவன் கொடுமைசெய் பசிப்பிணி
அடியொடுங் கெடுத்தளம் அருந்திற லரசே!
மலரடி வணங்கினன் வாழ்கநின் வண்மை!
நிலவுல கெங்கணும் நீள்கநின் செங்கோல்!
கலைநலம் பேணுநற் காவல! வணக்கம்,

பாரி :- வருக! வருக! மலர்கநும் வாழ்வு!
யாவிரோ ஐயநீர்? எவ்விடத் துள்ளீர்?
மேவிய காரணம் விளம்புக! அமருக!

பாண :- பொன்னொளிர் மணியணைப் பூந்தவி சுற்றொரு
மின்னொளிர் முழுமதி மேவிய தோவெனக்
கண்ணுறு காட்சியை! கன்னனும் உட்குமின்
பண்ணமை மொழியினை! பரிதியின் வாய்மையை!
தண்ணுமைத் தடந்தோள்! தமிழ்த்தகை அரசே!
உடற்குறை களிற்றின் ஒண்டலை போலும்
தொடக்குறு நரப்பமை தொல்லிசை யாழ்கொடுப்
பண்ணமைத் தெழுமிசை பைங்கட லமுதென
வண்ணமும் தூக்குமோர் வகைபெற மிடற்றினால்
பாடுதல் வல்லவோர் பாணன்என் பாரெனை;
பைந்தமிழ்க் குரிசில்! பரிசில் வாழ்கையேன்.
விண்மணிக் கிடையொரு வெண்மதி ஆர்ந்தெனக்
கண்மணி இடங்கொளும் கவினமை காவல!
கடறுசெல் கலைமான் கடுந்தொழில் வேட்டுவர்
பொருத்திய வலையினுள் புகுந்ததைக் கூன்விரல்
கருத்தொளிர் கடுவனும் செம்முக மந்தியும்
குதித்தன மகிழ்ச்சியிற் கொம்பினை அசைக்க
உதிர்ந்தன பசுந்தழை உணணிய முயலும்
கான்பல சார்ந்த கவலைகள் நீங்கின்
மங்கையர் படைகொளும் மதவேள் ஊர்ந்திடும்
பொங்கிய தென்காற் பொலிவுறு பொதியிலின்
அருவியிற் பிறந்துநல் லாரமும் அகிலும்

நறுமென் சாந்தமும் நல்லறற் பொன்னும்
புரையகல் மணியும் பொற்புறப் பூண்டு
வரையிட மிழிந்து வளர்பூங் காவின்
இடையிடை ஓடி எழிலார் பன்மலர்
தொடைஎனச் சூடித் தொல்குடி மக்கள்
ஆருயிர்ப் பேணிய ஆக்கிய நற்பயிர்
சீருடன் செழிப்புற நீரினிற் காத்தே
அலைகடற் செல்வனை அடைந்திட உன்னிக்
கலகல ஒலியுடன் அலைக்கரம் நீட்டி
துடியிடை வளைந்து கடிதுசெல்வாள் போல்
ஓடுறு காவிரி உவப்புடன் பாய
ஆடுறு கன்னற் பீடுறு கழனியும்
தேமா வாழைத் தெங்கொடு கமுகும்
பூமாதவளின் பொலிவுற விளங்கும்
கருதரும் மருதம் கண்ணுறும் அப்பால்
செருநிறை செம்பயிர் உண்ணிய சேரும்
கருமுகில் ஈன்றெனக் கவைக்கோட் டெருமைகள்
தான்படிந் துழக்கலின் தண்ணருஞ் சேற்றிடை
மீன்பல கொன்றதை மென்மலர் கறிக்கும்
சுவையினில் அறியாத் தொல்வயல் நிறைந்த
வளமிகு வளவரின் வன்பதி என்பதி
ஊற்றென வழங்குநின் ஓம்பா வீகையைப்
போற்றிய உளத்தனாய் புன்மைசெய் வறுமைஎன்
பிடர்பிடித் துந்தநின் பெருமலை யடைந்தனன்
இடர்தவிர்ந் தனன்நின் இசைபுகழ் உளத்தனுன்
அருள் மொழி நோக்கினன் ஆணைதந்தருள
வேண்டுதும் அரசே! விளங்குக நின்புகழ்!

பாரி :- காண்டகு மொழியால் கவினுறப் பேசுமுன்
மொழியே ஈங்ஙனம் இருப்பின் முதுகுடி
வழியே நின்று வான்முறை அறிந்து
பாடுறும் இன்னிசைப் பீடெலாம் யாங்ஙனம்
இருக்குமோ வறியேன் எழிசைப் பாண!
பைவிரி அரவமும் மெய்கிளர்ந் தாடும்

வையகம் புகழும் வண்டமிழ் இசையினை
மாம்பொரு மாக்களும் மறுப்பரோ? மேலும்
இசைகுருக் காதார் இவ்வுல கோரின்
வசைக்கிலக் காவார் வான்தமி ழிணைந்தேழ்
சுரங்கமழ் இசையினைச் சுருதியி லமைத்துநம்
அவைமகிழ் வகையால் அன்புடன் விருந்தினைச்
செவியமு தாகநீ சிறப்புடன் நிகழ்த்துக!
பண்புடைப் பாணநீ பாடுக! பாடுக!

பாண: உளங்கலங் காதசீர் ஒண்கலை வாண!
களங்கொளுங் காவல! பாடுவன் வணக்கம்.

[விருத்தம்—காம்போதி]

ஒப்பனை ஒளிர்மணிப்பூண் உணவுநல் உடையும்நீரும்
இப்பெரும் உடலின்நீக்கும் எழில்பெரு நல்லாரின்பம்
ஒப்புர வொழுக்கம் வாய்மை ஒண்மையும் உளத்தின் நீக்கும்
செப்பரு நிரப்பே! செம்மற் சேர்ந்தபின் எங்குற்றுயே!

[இசைப்பாடல்]

இராகம் ;- கல்யாணி.
தாளம் :- ஆதி.

**முதனிலை.**

யாதுசெய் வாயினி நீயே—உற்ற
கோதுடை நிரப்பெனும் கொடும்பவத் தோயே—(யாது)

**இடைநிலை.**

நீதி நல்லறம் நிறையொடும் போக்கினை
வீதி தோறுநின் றேங்கிட ஆக்கினை—(யாது)

**இறுதிநிலை**

பொருளுடை யோரிடம் புகுந்தெனை வாட்டினை
இருணிறை பாழிடம் இழுத்தெனைக் கூட்டினை
மருள்கொளச் செய்தனை மானத்தை ஓட்டினை
அருள்கெடும் பேயரின் அவைதனில் வீட்டினை—(யாது)

அழுக்கொடு பசிப்பிணி அலைத்திட விடுத்தனை
இழுக்கொடு யாவரும் ஏசிடப் படுத்தனை
சழக்கரின் அவைதனில் சார்புறக் கொடுத்தனை
ஒழுக்கமும் கல்வியும் ஒண்மையும் கெடுத்தனை—(யாது)

துணையுநன் நண்பரும் சுற்றமும் துரத்தினை
இணைபுரி நல்லற இல்லினைப் பிரித்தனை
பிணியுடன் பீழைகள் பலபல விரித்தனை
கணையினும் கொடியைஎன் கருத்தும்நீ திரித்தனை—(யாது)

பறம்பினின் எல்லையைப் பார்த்தறி வாயோ?
அறம்பயில் பாரிதன் அவைவரு வாயோ?
திறம்பயில் வரிசையை நீதெரி வாயோ?
மறம்பயில் உளத்தொடும் இனிப்பிடிப் பாயோ?—(யாது)

**பெருநா :** இமையரும் விரும்பும் ஏழிசைத் திறனெலாம்
அமையவே பாடினை இருங்கலைப் பாண!
மகிழ்ச்சி மகிழ்ச்சி மாபெரும் மகிழ்ச்சி.

**பாரி :-** புகழ்ச்சியி லடங்காப் பொலிவுடை இன்னிசை!

**கபி :-** சொல்லும் பொருளும் நல்லிசைப் புலவரும்
வல்லிதின் மொழியுமிவ் வகையறி யலரே
கருத்தொடு புகழினைத் திருத்தமொ டிசைத்த
பொருத்தம் கண்டுளம் மகிழ்ச்சியிற் பொங்கினன்.

**பாரி :-** புறமும் அகமும் புத்துணர் வெய்தத்
திறமும் பண்ணும் திண்ணிதின் ஆய்ந்து
நவைதீர் இசையினை நரம்பமை யாழெடும்
செவிசேர்த் தனையே செந்தமிழ்க் கலைஞன்நீ!
வாழிய பாண! வளர்கநின் கலைவளம்!

[பாரி தன் பணியாளனைப் பார்த்து]

ஏழிசை யால்நமக் கின்பினைத் தந்த
ஏழிசைப் பாணர்கெஞ் சிறும்பூ தெய்த
ஆடியல் யானையும் அவிருளைப் பரியும்
பீடியற் றேரும் பொன்னும் பொருளும்

சிறப்பமை அணியும் செம்மணிக் குவையும்
வெறுத்திடு மளவிற் குறுப்புடன் தருக!

**பணி :-** ஆணையின் வழியே ஆக்குவன் வணக்கம்!
பாணரே! வருக! பரிசிலேற் றருள்க!

**பாணன் :-** வரையா ஈகை வண்கலைக் கடலே!
வணக்கம் வணக்கம்! வளர்தமிழ்ச் செல்வ!
புரையா நின்புகழ் பூவெலாம் விளங்க
வாழியர் நெடிதே வாழிய செங்கோல்
வாழியர் நின்குடி வளம்பல நிறைந்தே!
வருகிறேன் அரசே மலரடி மறவேன்
வாழ்க! வணக்கம்

**பாரி :-** வருக! வணக்கம்
[பணியாளன் பாணனுடன் செல்ல வாயில் காவலன் வந்து மன்னனை வணங்கி]

**வாலான் :-** வடிவே லரசே வணக்கம்! வணக்கம்
குடிகள் யாவரும் குறையுடை யோராய்
செங்கோல் மன்னவ! செவ்வியைக் குறித்து
வாயிலில் நிறைந்துநும் வருகை நோக்குவார்

**பாரி :-** ஆயின் செல்வோம் அவர்குறை களைவதென்
பெரும்பணி யன்றோ [நடந்துகொண்டே]
[அமைச்சர்களைப் பார்த்து] பின்னே வருக!

**குடிமக்கள் :-** வாழ்கஎம் மன்னர்! வாழ்கஎம் அரசர்!

**பாரி :-** அன்புடை மக்களே அனைவரும் வருக;
நுங்கட் குறுகுறை யாவை? அணுகிய
துன்பினைக் கூறுக! துயரினைச் சொல்க;
இடையுறு துன்பினைப் புடைபெயர்த் தெரிவேன்

**மக்கள் :-** கொடைமகிழ் அரசே! நுங்குடி வாழுநர்
குறையொடும் வாழ்வரோ? கொடும்பகை யுறுவரோ?
அறியோம் இதுவரைத் துன்பொடு துயரை

முறைசெறி மன்னவ! மொய்கான் இடைவளர்
கொடும்வன விலங்குகள் தடம்புனம் விளைபயிர்
இடந்தொறும் புகுந்தழிக் கின்றன இல்லுறை
மடமான் பசுவின மாக்களை இரவினில்
அடும் வகை சூழ்ந்தன அளப்பில அவையே.
விலங்குசெய் பகையலால் வெளிப்பகை வேறில

பாரி :- கலங்குதல் வேண்டா கவலையை ஒழிமின்!
துலங்குநற் படையுடன் துன்னுவன் ஆங்கே
துன்புசெய் விலங்குகள் பகையினைத் துடைப்பேன்
அன்புறு மக்களே அமைதியிற் செல்க!
இன்பினை விளைப்பதே என்கடன் மறவேன்
நலம்புணர் குடிகளே நன்றுநீர் வருக!

மக :- வலநிறை மன்னவ! வாழ்க! வணக்கம்
உலகெலாம் நின்புகழ் ஓங்குக வெற்றித்
தலமெலாம் பரக்கத் தமிழெனை வாழ்க.

முதற்காட்சி முடிவு.

---

தமிழ் வாழ்க.

# கரந்தைக் கோவை.

[ வித்துவான். ச. பாலசுந்தரம். ]

## 1. கைக்கிளை.

### காட்சி.

1 [1]சொல்லுக் குயர்ந்த தமிழ்வாழும் தூய கரந்தைவெற்பில்
[2]அல்லைச் சுமந்து [3]முயனீக்கி மானை அமைத்தொளிதேர்ந்
[4]தெல்லைக் குறைக்கு மெழில்சோலை தன்னிலெனக்கு முன்னர்
முல்லைக் கொடிக்கண் முகிழ்த்தது வேயோர் முழுநிலவே,

### ஐயம்.

2 [1]பூமரு காவின் புவிமகளோமரைப் பொன்மகளோ
[2]பேமரு நீர்வள ரும்மக ளோமலைப் பெண்மகளோ
[3]தேமரு பைந்தமிழ்த் தீஞ்சுவை நாளும் திசைபரப்பும்
[4]காமரு தஞ்சைக் கரந்தை யினிற்றனி காண்பவரே.

### துணிவு.

3 நாடிக் கரந்தையை நட்டபின் நீங்கும் [1]நவையெனவே
வாடித் துவளுமித் தாருநற் றெய்யிலும் வண்டமிழைத்
தேடிப் பயின்றார் [2]மதிபோல் அரும்பித் திகழ்வியர்வும்
மூடித் திறக்கும் விழியுநாம் [3]காண்டுமிம் மொய்குழற்கே.

### குறிப்பறிதல்.

4 [1]ஆயும் புலவர்க் கரங்காய்த் திகழ்ந்தறி யாமைமுற்றுந்
தேயும் படித்தமிழ் செப்பும் கரந்தைத் திருவரைமேல்
[2]வேயும் மருளுமித் தோளிநம் பாற்றம் விழியமுதைப்
பாயும் படிக்கருள் பாலிக்கு மில்லைப் [3]பருவரலே.

---

1. 1. புகழ் 2. இருள்போன்ற கூந்தல்-3. கறை 4. கதிர்ஒளி.
2. 1. மலர்மணங்கமழும். 2. அச்சம் வளரும். 3. தேன் நாறும். 4. காமம் மருவும் = விருப்பமமைந்த.
3. 1. குற்றம். 2. அறிவு. 3. கண்டோம்.
4. 1. நூலாய்தலைச்செய்யும். 2. மூங்கில். 3. துன்பம்.

## 2. இயற்கைப் புணர்ச்சி.

### இரந்து பின்னிற்றற்கெண்ணல்.

5 குணங்[1]கனி நாவலர்த் தாளிணை போற்றிக் குளிர்தமிழ்நூல்
மணங்கனி நுண்மையைத் தேறும் கரந்தைநன்மாணவர்போல்
அணங்கனை யாளெழில் ஆளுதற் கேங்கிநின் னன்புரைத்து
[2]வணங்கநி னைத்தனை வன்னெஞ்ச மேயினி வாழியவே.

### இரந்து பின்னிலை நிற்றல்.

6 [1]உழையுங் [2]கழையும் [3]மழையுங் கவின்தேர்ந்
தொருங்கிரப்பத்
[4]தழையும் அழகிற் றிகழ்ந்தாய் கரந்தைத் தமிழ்வரைவாய்
[5]குழையுங் [6]குமிழும் குறித்தேகும் அம்பினைக்
[7]கோட்டியொரு
பிழையும் இழைத்திலே னென்னுயிர்ப் பாய்ச்சலென்
பெண்ணணங்கே.

### முன்னிலை யாக்கல்.

7 [1]தன்னேய் [2]இருந்தமிழ்த் தாய்சேர் கரந்தைத் தடவரைமேல்
மன்னேய் இடைப்பிடி மாதரைத் தீர்ந்தொளி மேவியலைப்
[3]பொன்னேய் எழிலையிப் பூம்பொழில் நாணப் புறம்பரப்பிக்
கொன்னே தனிநின்ற காரணங் கூறுக கோகிலமே.

### மெய் தொட்டுப் பயிறல்.

8 கல்லார் இலாக்குறை காணும் கரந்தையின் கண்ணனிச்சம்
அல்லார் குழலில் அடிகளை யாமல் அணிவரிடை
நில்லார் இனியெனத் தேர்ந்தும் நெருங்கின் நிரைச்சுரும்பீர்!
பொல்லார் உமைப்போ லிலையினிப் போம்நும் புகழ்நிற்குமே.

---

5. 1. முதிர்ந்த 2. இரந்துபின்னிற்றற்கெண்ணல்,
6. 1. மான்விழி. 2. மூங்கில்—கரும்புபோன்ற சொல்லுக்குமாம். 3. கூந்தல். 4. மிக்கோங்கும். 5. காதணி. 6. குமிழ்போன்ற மூக்கு. 7. கோட்டி என்றதனால் புருவமாகிய வில்லென்க.
7. 1. பிறவொப்பில்லாத. 2. பெரிய. 3. திருமகள்.

## பொய்பாராட்டல்.

9 சீர்நின்ற நூற்றெகை தேர்ந்தார் கரந்தைத் திருமகளுன்
ஏர்நின்ற சாயலுக் காற்றுத மஞ்ஞைநின் றேங்குறுமால்
நீர்நின்ற தாமரைக் [1]கண்ணீர் நிறைதலுர் நீணிலவவ்
[2]வார்குன்ற மேறலும் நின்[3]வாண் முகம்போல்
வளம்பெறற்கே.

## இடம் பெற்றுத்தழாஅல்.

10 [1]தெம்புற்ற நற்கலை தேர்ந்தார் கரந்தைத் திருமலையில்
[2]வம்புற்ற கொங்கைப் புணையாக நீந்திநின் வாள்விழியாம்
அம்புற்ற வெம்மைநீத் தல்குற் றடப்படிந் தாடுதற்கிப்
[3]பம்புற்ற சோலைப் பைந்தடம் ஏற்றது பான்மொழியே.

## வழிபாடு மறுத்தல்.

11 சார்ந்தாரை ஞானந் தழுவுங் கரந்தையிற் [1]சாந்தம் உனை
நேர்ந்தாரை நன்[2]மணம் ஆக்குவை யாதலின் நீள்துயராம்
ஆர்ந்தாரை நின்பா லனுப்புவன் அன்பினை ஆற்றி[3]முல்லை
சேர்ந்தாரை [4]நாணுறக் காப்பதும் நின்கடன் தேர்ந்தறியே.

## இடையூறு கிளத்தல் [நாணிக் கண்புதைத்தல்]

12 மோனைத் தொடைமுத லாமலங் காரங்கள் முற்றகவித்
தேனைத் தருப்புல வோர்மலை சூழ்ந்து திகழ்கரந்தை
[1]மானைத்[2] தளிரால் மறைத்தபின் [3]வேடனின் மார்புதைக்கும்
[4]ஆனைத் [5]துரத்து [6]மறத்தினைக் கண்டெனின் றாணங்கே

---

9. 1. கள்ளாகிய நீர். 2. உயர்ந்த. 3. ஒளி.

10. 1. தேம், குறுக்கல் விகாரம். 2. கச்சு. 3. விரிந்த.

11. 1. சந்தனமரமே. 2. நறுமணம், மணவினை 3. கற்புக்கடம் 4. நாண்குணமும், கயிறுமாம்.

12. 1. கண்கள் 2. கைகள் 3. வேளாகிய யான்—வேட்டுவனும் ஆம். 4. கொங்கையினை. 5. மறையாதிருத்தல். 6. அறம் மறம் எனப் பிரிக்க.

### நீடுநினைந்திரங்கல்.

13 கொன்றைப் புதுமலர்க் கொள்ளுஞ் சுணங்கணி கோலமுறு
குன்றைப் பொருந்திக் குளிர்வா [1] ஆம்பலிற் [2]கோங்கினையாம்
என்றைப் பொழுதினி லுண்ணுவம் என்றுளம் ஏங்குறுமால்
மன்றைப் பொருந்துநன் மாண்பார் கரந்தை மலையிடத்தே.

### மறுத்தெதிர் கோடல்.

14 [1]கண்மை யவாவுவர் வாழ்கரந் தைப்பொழில் காவலரென்
பெண்மை யவாவுவர் நாணந் தடுத்தெனைப் பின்னிழுத்தால்
[2]வண்மை யவாவுவர் மங்கையர் என்கிற வாயுரையை
உண்மை யவாவுவர் ஒப்புவ ரோஉளம்! ஓர்ந்தறியே.

### வறிதுநகை தோற்றல்

15 அவ்வைத் தமிழ்முதல் ஆயிரங் கோடி அருந்தமிழ்நூல்
[1]செவ்வைப் பயில்கரந் தையினைச் சேர்ந்தவர்சிந்தையெனக்
கொவ்வைக் கனியிடைக் கோவை கொண்டேறிக் குளிர்நிலவும்
[2]மவ்வல்[3]அரும்பும் மருட்கைகண் டுள்ளம் மகிழ்ந்ததுவே.

### முறுவற் குறிப்புணர்தல்.

16 ஊனே உனைப்பிரி வேனெனும் என்னுயிர் ஓம்புதற்குத்
தேனே யனைமொழிச் செந்திரு [1]வாணகை சேர்நிலவைத்
தானே விளக்குமித் தையலின் தண்ணளி, தாழ்வகல
நானே கரந்தையின் [2]செந்தமிழ்ப் பேற்றினை நண்ணினனே

### முயங்குத லுறுத்தல்.

17 நூலைப் பயில்கரந் தைத்தலம் நிற்கும் நசுப்பிலவர்
[1]வேலைச் செறித்திரு [2]வில்வளைத் தென்னுளம் வீக்கியபின்
[3]கோலைத் துறந்திரு [4]குன்றினைத் தந்ததும் [5]கூர்தரள
வேலைப் படிந்தமு துண்ணற் கிசைந்ததும் மெய்த்தவமே.

---

13. 1. வாய் 2. எயிறூறிய நீர்.
14. 1. கண்ணோட்டம். 2. வள்ளன்மை—மென்மைஇரக்கம்.
15. 1. செம்மையாக. 2. பற்கள். 3. முறுவல்.
16. முறுவற்குறிப்பு—அளிவிளக்குமென்க. 2. ஆருத இன்பம்
17. 1 கண்கள் 2 புருவம் 3 வளையல் 4 தனம் 5 வாயாகிய கடல்.

### புணர்ச்சி மகிழ்தல்.

18 புலந்தேர்ந் தடங்கிய நாவலர் போற்றிப் புகழ்கரந்தைத்
தலந்தேர்ந் திருக்குமித் தையற் கனிவாய் தருமமிழ்தாம்
நலந்தேர்ந் தருந்திய பேரின்பம் யாவும் நலிந்துதவ
வலந்தேர்ந் திருக்குமெம் மாதவர்க் காயினும் வாய்த்திடுமே.

### புகழ்தல்.

19 கடற்கொண்ட மேருவிற் [1] றேன்கவி பாயும் கரந்தையினிற்
றடங்கொண்ட வாவியுட் டாமரை காள்நீர் தவஞ்செயினும்
மடங்கொண்ட பாவையின் வாண்முகம் ஒவ்வீர் மலர் வதன்முன்
வடங்கொண்ட மாமுலை[2] மானுவம் என்னினும்[3] மாசுமக்கே

## 3. வன்புறை.

### அணிந்துழி நாணியது உணர்ந்து தெளிவித்தல்.

20 கண்ணொத்த பாவலர் சூழுங் கரந்தைக் கடிபொழில்வாய்
பண்ணொத்த தேமொழிப் பைங்கிளியே[1] பழம் பான்மை யைப்போல்
கண்ணொத்த ஆயமும் ஐயப்படாமற் கலன்றிருத்தி
[2]விண்ணொத்த கூந்தலும் நீவினன் வேண்டா[3] வெருவரலே.

### பெருநயப்புரைத்தல்.

21 [1]காவியை [2]முல்லையை [3]ஆம்பலை மேவிக் கரந்தையிலென்
ஆவியைத் தாங்குமிவ் [4]வம்புயம் போன்ற அணிமலரெவ்
[5]ஓவியப் பொய்கையுட் கண்டனிர் காணின் ஒருங்கெழுந் தவ்
[6]வாவியைக் காட்டுவி ரேலுமை வாழ்த்துவன் வண்டினமே.

---

19, தேன்போன்ற சுவைக்கவி 2 ஒப்பாவேம் 3 குறைபாடாக முடியும்.

20. 1 தோழியர் அணிசெய்தது போலவே 2 கருமுகில் 3 அஞ்சுதல்.

### தெய்வத்திறம் பேசல்.

22 நாடும் மொழியுநங் கண்ணெனப் போற்றி நவைதவிரப்
பாடும் புலவர்கள் கூடுங் கரந்தைப் பனிவரைநாம்
கூடும் படிவிதி கூட்டிய தாலினிக் கோங்கரும்பு
[1]வாடுந் தடமுலை யாய்தவிர் ஐயமும் வாட்டமுமே.

### இதுவுமது.

நோலே னருதவ மாயினும் நண்ணிய நோக்கமைந்த
நூலே வளர்கரந் தைப்பொழில் தாமரை நுண் டடத்திற்
சேலே எனும்விழிச் செந்திருவேயுனைச் சேர்ப்பதற்குப்
பாலே துணையெனின் யார்பிரிப் பாரினிப் பாரினிலே.

### பிரியேனென்றல்.

23 பண்பெற்ற நற்றமிழ் பாயுங் கரந்தைப் பனிவரைமேல்
பெண்பெற்ற நற்[1]கவின் யாவையும் பெற்றேன் பிரித லெவ்வன்
[2]எண்பெற்ற நெஞ்சினில் [3]ஓவியம் ஆய இருவிழிநீ
கண்பெற்ற ழிப்பதற் கொப்புவர் யாருரை காரிகையே.

### பிரிந்துவருகென்றல்.

24 [1]ஆவிற் பிரிந்தய லாடுமி ளங்கன்றின் அன்னஅயற்
காவிற் பிரிந்து வருவேன் கரந்தைக் கவிஞரின்வெண்
பாவிற் பிறந்த தளையொப்ப வேறு படாதெனுரை
மாவிற் [2]பிளந்த வடுவொத்த கண்ணி மடமயிலே.

### இடமணித் தென்றல்.

25 [1]தொடைதிரண் டாகுங் கவிபோற் கரந்தையிற் றூமொழி யாய்
புடைதிரண் டோங்கியென் போதங் கவரும் புணர் முலையின்
இடைதிரண் டேகும் இடம்போ னய்வரை இடைப்படுக்க
[2]நடைதிரண் டேகும் நதியில்லை யேலொன்று நம்பதியே.

---

22. 1 ஒப்பின்றி வாடுதல்
23. 1 கவினுலாகிய இன்பம் 2 சிந்தனை 3 பெறற்கருமையாய
24. 1 தாய்ப்பசு 2 வடுவைப் பிளந்தாலொத்ததாய்
25. 1 செய்யுட்டொடைகள் 2 ஒழுகும் செலவு.

## 4. தெளிவு.

26 [1]சங்கத் தமிழ்தெரி வார்கரந் தைப்புகழ் சான்றதமிழ்ச்
[2]சங்கத் தமிழ்தெரி நாவினர் சொல்லும் தவறமென்[3]று
சங்கத் தமிழ்தெரி யாதநெஞ் சேயினிச் சங்கைதவிர்
[4]சங்கத் தமிழ்தறி யாரலர் நம்முயிர்த் தாங்குவரே.

## 5. பிரிவுழி மகிழ்ச்சி.

### செல்லும் கிழத்தி செலவு கண்டு உளத்தொடு சொல்லல்

27 மயல்தங்கும் நெஞ்சம்! என் ஆவியைத் தாங்கி
மடமயில்போல்
கயல்தங்கு பங்கயம் கோங்கிரண் டார்ந்த கரந்தையினிற்
[1]செயல்தங்கு பாதம் சிலம்பார்ப்பக் கையினிற் சிலையுடன்
புயல்தங்கு சோலையிற் போகின்ற தாலுயிர்ப் பூங்கொடியே.

### செல்லுங் கிழத்தி செலவு கண்டு பாகனொடு சொல்லல்.

28 தொண்டால் தமிழ்வளர்த் தோங்குங் கரந்தையிற்
றேழியர்கள்
கண்டால் வரும்பிழை என்றுமுன் பார்த்துக் கனிதமிழை
உண்டால் எனமகிழ் என்னுளம் பின்வரப் பார்த்தொதுங்கும்
வண்டார் மலர்க்கொடி காண்கநற் பாக,விம் மாநிலத்தே.

## 5. பிரிவுழிக் கலங்கல்.

### ஆயவெள்ளம் வழிபடக்கண்டிது மாயமோவென்றல்.

29 கொங்குறு மாமலர்ச் சூழ்வரும் தும்பிக் குழாமெனவேர்
பொங்குறு மாயநின் றேத்தப் புகுமயில் பூந்தமிழ்ச்சீர்
தங்குறு நற்கரந் தைப்பொழில் மேவித் தழுவியுயிர்
பங்குறச் சென்றது மாயமல் லால்நிகழ் பான்மையதே?

---

26. 1. சங்க இலக்கியங்களைக் கற்ற நாவலர் உறையும் கரந்தை. 2. சங்க நூற் பண்புகள். 3. ஆசங்கம் = ஐயத்தில் ஆழும் நெஞ்சே. 4. கூட்டத்தால் வரும் இன்பம்.
27. அசோகந்தளிர்.
28. இம்மாநிலத்தே தொண்டால் ஓங்குங் கரந்தை எனக் கூட்டுக.

## வாயில்பெற் றுய்தல்.

30 வாசத் தமிழ்பயில் வார்கரந் தைப்புகழ் வாழ்த்தும் நெஞ்சே!
பேசத் தருங்கவின் பெய்வளைக் காகநீ பேதுறல், காண்
நேசத் துடன்கதிர் செல்வழிச் செல்லும் நெருஞ்சியெனப்
பாசத்துடன் வரும் பாங்கியர் நாப்பணோர் பைங்கிளியே.

## பண்பு பாராட்டல்.

31 நீர்நின்று வாடுசெந் தாமரை யன்றி நெடுவிசும்பின்
கார்நின்று தேயுமவ் வான்மதி தாமும் கரந்தையினிற்
சீர்நின்ற நாவலர் ஓர்புடை ஒப்பெனச் செப்புவதால்
ஏர்நின்ற நங்கையின் வாண்முகக் கியாதும் இணையிலையே.

## இதுவுமது.

இயலும் கரந்தை இடைத்தமிழ் ஒன்றே இயையினன்றிக்
குயிலும் கிளியுமென் பூவையும் யாழும் குறிப்பினவள்
பயிலும் மொழியியை யாப்பொருளில்லாத பான்மையினல்
அயிலும் கணையுநன் நோக்கமொவ் வாவரு ளாமையினே

## பயந்தோர்ப் பழிச்சல்.

32 பூழியர் சோழியர் சேரிம் மூவரும் போற்றமிழிற்
கூழியம் செய்கரந் தைத்தமிழ் போன்ற என் ஓருயிராம்
ஏழையைப் பெற்றெனக் கீந்தவர் இவ்வுல கின்பமொடு
வாழியர் முந்நீர் மணலினும் ஊழி வளம்நிறைந்தே !

## கண்படை பெறாது கங்குல் நோதல்.

33 தஞ்சையி னற்புகழ் தாங்குங் கரந்தையைச் சாரகில்லார்
நெஞ்செனக் காரிருள் வெள்ளத் தழுந்தி நிலைதளர்வேன்
அஞ்சலெ னக்கரம் நீட்டியெடுத்தெனை ஆற்றுதற்குச்
செஞ்சுட ரென்றெழுவான் குணக் காகுந் திசையிடத்தே.

(தொடரும்)

பாடல் :—

கடற்பவளம் நுந்தையின் கனவெனும்பு அல்லவே
கெட்டிமுத்து நுந்தையின் வட்டக்கண் பல்லாகுமோ
அங்கபங்கமில்லையே அனைத்துமாற்றம் விந்தையே
ஐந்துபாக ஆழத்தில் நுந்தைதூக்கம் காண்பையோ

**வீரரா :—** இசை என் தலைக்கு மேல் கேட்கிறது. பொருள் என் தந்தையாரைப் பற்றியது. அவர் ஆவியே இவ்வாறு என் உச்சியில் நின்று சகுனமாகிறதா? ஐயோ இதன் விளைவு என்னவாகுமோ? இவ்விசை மக்களின் இசையாக வில்லையே! தெய்வ இசையாக என்னை உருக்குகின்றதே. அப்பா அப்பா! தங்களைப்பற்றி எனக்கு ஒன்றுமே விளங்கவில்லையே. என்னைப்பற்றியும் எனக்கு ஒன்றும் உணரமுடியவில்லையே.

(மாலினி—சயசீலன் உரையாடல்)

**மாலினி :—** அப்பா, அது என்ன? நம்மைப்போலவே இருக்கிறதே? நமக்கு மேலாகவும் தோன்றுகிறதே? தெய்வமா?

**சயசீ :—** கண்ணில் திரைபோட்டுக்கொண்டு பார்க்கிறாயா? கண்களை இலேசாகக் கசக்கி உற்றுப்பார். அது நம்மைப்போன்றதுதான். உண்ணும், உறங்கும். நம்மைப் போன்று ஐயறிவும் அதற்கு உண்டு. நேற்று உடைந்ததாக நீ கவலைப்பட்ட கப்பலிலிருந்து வந்த ஒரு மனிதன். பூவின் அழகைப் புழு அரிப்பதுபோல அவர் அழகு அவரது துக்கத்தால் சிறிது அரிக்கப்பட்டுள்ளது. தன் இனத்தவரைத் தேடித் திரிகிறார். அவர் மனிதர்தான்.

**மாலினி :—** நான் இவரைத்தான் முதலில் பார்த்தேன். அழகிற்கும் இவர்தான் முதலாக இருப்பார் என நம்புகிறேன்

(சயசீலன் தனக்குள் எல்லாம் முறைப்படி நடக்கத் தொடங்கிவிட்டது. ஒருபுறமாகக் காத்தவராயனைப் பார்த்து விடுதலைபெற உனக்கு இன்னும் ஓரே நாள்தான் இருக்கிறது)

**வீரராசே :—** துக்கத்தின் முடிவு இன்பம். எனது துக்கத்தை இசை மாற்றியது. இங்கு அழைத்துவந்து இவ்வழகின் கருவூலத்தின் முன் – இன்பவூற்றின் முன் என்னை நிறுத்தியது. இவ்விசை விண்மகளால் எழுப்பப்பட்டதல்ல. விதிமகளின் காப்புச் செய்யுளின் இசையாகும். இத்தீவில் இத்தெய்வம் என் இருக்கிறது? தெய்வமே, என் விண்ணப்பத்தைச் செவி மடுப்பாயா? எனது வினக்களுக்கு விடை வேண்டும். அவ்வளவுதான். இத்தீவே தங்கள் இருப்பிடமா? வேறு எங்கிருந்தாவது நான் வந்துசேர்ந்ததுபோல தாங்கள் வந்தீர்களா? தங்களிடத்தில் நான் எவ்வாறு நடந்துகொள்ளவேண்டும்? அசட்டுத்தனமாக நான் என்னென்னவோ கூறிவிட்டேன். அவற்றை மறந்துவிட்டு ஏ, அதிசயமே தாங்கள் தெய்வப் பெண்ணு? மானிடப் பெண்ணு என்பதற்கு மட்டும் விடை வேண்டுகிறேன்.

**மாலினி :—** நான் அதிசயமல்ல. பெண். நும்போன்று மானிட இனத்தவளே தான்.

**வீரராசே :—** ஆ, என் இனம். பேசுவதும் எம் தாய் மொழி. எனது மகிழ்வை, பூரிப்பைப் பிறர் காணுவதைவிட என் ஆத்மாவே காணட்டும். எம்மவர் நடுவில் எம் தாய் நாட்டில் இவ்வுரையாடல் எம் தாய்மொழியில் நிகழ்ந்தால் மக்களின் கற்பும், காதலும், பண்பும் பெருகும். நாடே வளர்ச்சியடையும். நானே தலைவன் என்ற நம்பிக்கை உண்டாகிறது. தெய்வத் தலைவி முன் பேசும் நான் தலைவனுக ஆவது; இருப்பது; எப்படித் தவறும்?

(சயசீலன் தனக்குள் – வீராசேந்திரன் அரண்மனையிலிருந்தால் மாலினிக்குத் தன்னை ஒளித்துத் தனது இடம், பொருள், ஏவல் முதலிய காட்டிக் காதலனுக எண்ணுவான். ஒன்றுமற்ற இத்தீவில் உள்ளத்தைக் காட்டமுடிகிறது.)

**சயசீ :—** ஐயா, நீர் தலைவரென்ருல் எப்படி? நம் வீட்டுக்கா? நாட்டுக்கா? உமக்குத் தந்தையார் இல்லையா? இருந்து கேட்டால்?

**வீரராசே :—** இரண்டிற்கும் தான். என் தந்தையார் நாகையரசர். புயலால் அவர் கடலில் மடிந்தார். இருந்து கேட்டால் எனக்கு மிகவும் மகிழ்ச்சி. இல்லையே என்பதற் காகத்தான் அழுகைகூட வருகிறது.

**மாலினி :—** கடவுளே, எம்மைப்போல் அவருக்கும் தந்தையிருக்கக்கூடாதா?

**சயசீ :—** புயலால் உம் கப்பலே அழிந்துவிட்டதா? உம்மைத் தவிர யாவருமே அழிந்துவிட்டார்களா?

**வீரராசே :—** எம் தந்தை, வஞ்சிப் பிரபு ......... ஐயோ அனைவருமே கப்பலுடன் மூழ்கிவிட்டனர். நான் இங்கு வந் ததுபோலவே கரைசேர்ந்ததும் விந்தையாக இருக்கிறது. நான் வீரராசேந்திரன்.

(சயசீலன் தனக்குள்) இவர்கள் தொடர்பு இலகுவில் கிடைத்துவிட்டது. இலகுவில் கிடைத்த எந்த அரிய பொரு ளும் இலகுவில் நழுவினும் நழுவலாம். ஆதலின் இவர்களின் காதலின் வளர்ச்சியைச் சிறிது கடினமாக்கிப் பிணைக்கவேண் டும்.)

**சயசீ :—** உன் வார்த்தைகளால் உன்னை மறைத்துக் கொள்ளுகிறாய். உன் காதல் நடிப்பில் உன் கருத்தை மூடு கிறாய். பல உருவங்களில் நீ நடிக்கக் கற்றிருக்கிறாய். என்றாலும் உன் மூல உருவம் எனக்கு விளங்காமல் இல்லை. நீ இத்தீவுக்கு வேவு பார்க்கவந்த ஒரு வேவுகாரன். என் வாழ்வை முடிக்க வந்த வஞ்சகன். இத் தீவையும் என்னிடமிழுந்து பிடுங்கிக் கொள்ள ஏதோ சூழ்ச்சி நடந்திருக்கிறது.

**வீரராசே :—** இல்லை; இல்லை; நான் ஒன்றுமறியேன். இதைத் தவிர நான் தங்களிடம் சொல்லக்கூடியது ஒன்றுமில்லை.

**மாலினி :—** அப்பா, இவ்வளவு அழகிய உடலில் பொய், சூது குடிகொள்ளுமா? குடிகொள்ள வாய்ப்பு ஏற்பட்டாலும் உண்மைக் காதலும், உறுதியும் அவற்றை உள்ளே நுழைய

விடுமா? அழகிய கோயில், அருமை உருவம், அங்கு தீமை இருக்கவே முடியாது.

**சயசீலன் :—** மாலினி, உனக்கென்ன தெரியும்? உலகம் உன் அநுபவத்தில் இரண்டு ஆட்களையுடையது. உனக்கு என்னைத் தெரியும். இவனை இன்று கண்டாய். அவ்வளவுதானே நீ குறுக்கே பேசாதே. வீராசேந்திரா வா இங்கே. நீ ஒரு வேவுகாரன். நீ நேர் முறையில் வந்திருந்தால் உன்னைத் துன் புறுத்தல் அறமன்று. நீ காதல் நாடகத்தில் வந்த கயவன். ஆத லால் உன் கால்களிலும் கைகளிலும் தளையிட்டுக் குடிப்பதற்கு உப்புநீரும் கடித்துண்ண வேர்களும்தான் தருவேன்.

**வீரராசே :—** எல்லை கடந்துவிட்டது. எனது பகைவ ராகக் கணப்பொழுதில் மாறிவிட்டீர். மானமழியுமுன் சாவதா, அல்லது வாழ்வதா என்ற போராட்டத்தில் நான் வாழ்வதற்கு ஒரு காரணம் தோன்றிவிட்டது. என்னை விட நீவிர் பல முள்ளவர் என்பதை மெய்ப்பிக்குமுன் நான் உமது கட்டளைக்கு இணங்கேன். கத்தியை எடுத்துக்கொள்ளுங்கள். (கத்தியை உருவினான்)

**சயசீ :—** சீ, நீ ஒரு மனிதன். உனக்கொரு கத்தி- உன்னிடம் ஒரு வாள்போர். பேடிப்பையா. உன் கத்தி காரியத்துக்குதவாது. உன் கையும் கத்தியை வீசாது. இதோ பார் இக்குச்சி அவ்வாளினை முறித்துவிடும். உறையினில் அத னைப் போடு. அதனையும் கெடுத்து நீயும் கெடவேண்டாம்.

**மாலினி :—** தந்தையே வேண்டாம். அவருக்கு ஒரு தீங்கும் செய்துவிடாதீர்கள். தக்க காரணம் எதுவுமின்றி ஏன் இவ்வாறு செய்கிறீர்கள்? அவருக்குக் கேடு செய்தால் அது என்னையும் பற்றுமப்பா.

**சயசீ :—** வெறி தலைக்குமேல் ஏறிவிட்டதா? கால் தலைக்குப் புத்தி கூறுகிறது. நீ எனக்கு எதிர்கால நிகழ்வை எடுத்துக்கூற முற்பட்டுவிட்டாய்

**மாலினி :—** தங்கள் மனம் மாறவேண்டும். நான் கெஞ்சுகிறேன். எனக்கு வேறு யார் இருக்கிருர்கள்? இழிந்த பிறப்புக் கலியனுக்கு என்ன தெரியும்? உங்களைத் தவிர வேறு யாரிடம் நான் வேண்டுவது?

**சயசீ :—** நான் கிழவன். மற்றெருருவன் கலியன் மாணிடனே அல்ல. எங்களைத் தவிர வேறு ஒருவரையும் நீ பார்க்கவில்லை. ஆதலால்தான் இவன் உனக்கு மன்மதனுகத் தெரிகிருன். உலகில் எத்தனையோ அழகுடையவர்கள் இருக்கிருர்கள். உன் எண்ணத்தை மாற்றிக்கொள். இத்துரோகியை மறந்துவிடு.

**மாலினி :—** அப்பா, அதிக அழகுள்ளவர் எனக்கு வேண்டாம். இவருடைய அழகே எனக்குப் போதும். இவர் துரோகியல்லாதிருக்கும்போது நான் எப்படி அவரை மறப்பேன். எண்ணத்தை எப்படி மாற்றுவது? எண்ணும்போதெல்லாம் அது உறுதிப்படுகிறதைத்தான் நான் அறிகிறேன்.

**சயசீ :—** வீராசேந்திரா, இப்படி வா. நான் இடும் கட்டளையைச் செய்ய ஒத்துக்கொள். கீழ்ப்படி. உனது உயிர்தான் கீழ்ப்படியலாம். உன் உறுப்புக்களுக்கு இப்போது சக்தியில்லை. அசைக்கக்கூட முடியாது. இந்த அளவில் உன்னை மன்னித்தேன். இதோபார் குச்சி (நடுங்குகிருன் வீராசேந்திரன்) அஞ்சாதே. பணிந்து நட. அதுதான் உனது நோய்க்கு மருந்து.

**வீரராசே :—** நான் ஏதோ கனவு கண்டதுபோல் தோன்றுகிறது. எனது உறுப்புக்கள் ஒவ்வொன்றும் சொரணை அற்றுக்கிடக்கிறது. கால் கையை அசைக்கக்கூட முடியவில்லை. எனது பரிதாப நிலை, எனது தந்தையாரின் சாவு, என் உற்ருர் உறவினரின் இழப்பு, நீர் செய்யும் கொடுமை யாவற்றையும் என்னுல் பொறுக்கமுடிகிறது ஒரு நாளைக்கு ஒருதடவையாவது இப் பெண்தெய்வத்தைக் காணலாம் என்ற நம்பிக்கைதான் இப்பொறுமையைத் தந்தது. ஐயா, தாங்கள் என்னை எதற்குவேண்டுமானுலும் ஆளாக்கிக்கொள்ளுங்கள், பழிசுமத்

துங்கள், சிறையில் அடையுங்கள், நாகையை யார் வேண்டு மானாலும் ஆளட்டும். எந்தப் பகுதியை யார் ஆண்டால் எனக் கென்ன? நான் வேண்டுவதெல்லாம் இந்த அம்மையின் தரிசனந்தான். நான் யாருக்கு அடிமையாயிருந்தாலும் குறை வில்லை. இவ்வம்மையைப் பார்க்கும் சுதந்தரம் மட்டும் எனக் குக் குறையாமல் நிலைக்கவேண்டும்.

(சயசீலன் தனக்குள் சோதனை பக்குவமடைகிறது. ஒரு புறம் காத்தவராயனைப் பார்த்து — நீ விரைவில் விடுதலையடை வாய் ஆனால் இன்னும் இரண்டொரு கட்டளையைச் சரியாகச் செய்)

**மாலினி:—** அன்பரே, என் தந்தையார் இயற்கையில் பொல்லாதவரல்லர். இக்கூற்றும் அவர் இயற்கையில் இதுகாறும் இருந்ததில்லை.

**சயசீ:—** வீராசேந்திரா. வா என் பின்னால் - மாலினி நீ போ. இனி இவனுக்குப் பரிவுகாட்டிப் பேசாதே.

---

## அங்கம் 2. களம் 1.

தீவின் மற்றொருபுறம் — இராசேந்திரன் — இராசசிம்மன் அமணன் — கோவிந்தமாறன் — ஆதிநாராயணன் — பராந்தகன் இவர்கள் தோற்றம்.

**கோவிந்:—** (அமணனைப் பார்த்து) வருத்தம் வேண் டாம். நாம் யாவருமே உயிர் பிழைத்தோம். உயிரைவிடவா உயர்ந்த பொருள் உலகில் இருக்கின்றது? உயிர் தப்பியதே நாம் மகிழக் காரணமாக உளது. தாங்கள் என் வருந்துகிறீர்? கப்பலிலே இருந்தோம் கவலைப்படவேண்டியதுதான். 'கப்பல் காரன் பெண்டாட்டி தாலியைத் தொட்டுத் தொட்டுப் பார்ப் பாளாம்'' என்பார்கள். இப்போது கரையடைந்தோம்.

உயிருடன் இருப்பது, கரையடைந்தது எல்லாம் மகிழ்ச்சிதரும் ஏதுக்களாயிருக்க எதற்காக வருந்தவேண்டும்? உலகில் மக்களுடைய சுக துக்கங்களை எடைபோடமுடிந்து — போட்டுப் பார்த்தால் பலருக்குத் துக்கமே அதிகமாக இருக்கும். நம்மைப் பொறுத்தவரையில் சுகம்தான் அதிகம். ஆதலால் நாம் வருத்தப்படக் காரணமே இல்லையல்லவா?

**அமணன் :—** அதிகமாக அளக்கவேண்டாம் போதும்.

**இராச :—** எனக்கு மிகவும் கசப்பாக இருக்கிறது.

**கோவிந் :—** அப்படி விடக்கூடாது. பித்த மிகுதியால் வாய்க்கசப்பாக இருந்தால் உணவால் சரிப்படுத்தவேண்டும். மனக்கசப்பாக இருந்தால் எம்போன்ற நண்பரிடம் பேசிப் போக்கவேண்டும்.

**இராச :—** (அமணனைப் பார்த்து) நமது கோவிந்தமாறன் தலையில் அறிவுக் கம்பிகளின் வட்டம் நிறைந்திருக்கிறது போலும். அக்கடிகாரக் கம்பிகள் சாவி கொடுக்காவிட்டாலும் தளராமல் அடித்துக்கொண்டேயிருக்கும். புதுமையான கடிகாரம். அதனைச் சுமந்துதிரியும் இருகால் பெட்டி இது. தளராமல் மணியடித்தலைத்தான் பேசுதல் என்று அவர் சொல்லிக்கொள்வார்.

**அமணன் :—** ஆமாம், பெரிய அளப்புத்தான்.

**கோவிந் :—** ஐயா ஒரு... (இராசசிம்மன் அமணனைப்பார்த்துக் கடிகாரம் மணியடிக்கத் தொடங்கிவிட்டது - நாம் எண்ணிக் கொள்ளலாம்.) ஐயா கேளுங்கள். ஒரு மனிதன் தனக்கு வரும் துன்பத்தை எண்ணி வரவேற்க முற்பட்டால் அவனுக்கு (அமணன் இடைமறித்து)

**அமணன் :—** அவனுக்கு எல்லாம் காசாக மாறுமோ? காசியில் வந்ததென்று எண்ணிக் காசியாத்திரை சென்றுதான் துன்பத்தையும், துக்கத்தையும் மாற்றிக்கொள்ள முடியும் அவனால்.

இராச :— அமணர் புத்திகொண்டு கூறவந்த கருத்தை நமது கடிகாரம் புத்தியைச் செலுத்தாமலே திரித்து அடித்து விட்டது. அக்கடிகாரத்துக்குப் (கோவிந்தமாறன்) புத்தியிருந் தால் அதுபற்றி முடிவுகட்டிக்கொள்ளட்டும்.

கோவிந் :— பிரபுக்களே, நான் பேச ...... (அமணன் போதும் நிறுத்தும்) சரி மணி துருப்பிடித்தே போகட்டும்.

இராச :— இத்தீவு நல்ல பசுமை நிறைந்திருக்கிறது.

ஆதிநா :— நல்ல காற்று. கெட்ட சுவாச உறுப்புக்கள் கூட இதனுல் புதுமை பெற்றுப் பலமடையும்.

கோவிந் :— இங்கு வாழ்வுக்குரிய அனைத்தும் உள...... நிறுத்திக்கொண்டேன்.

அமணன் :— ஆனுல், வாழ்வதற்குத்தான் வழியில்லை.

இராச :— புல்வளம் நிறைந்திருக்கிறது. புல் இவ்வளவு செழிப்பாக வளர்ந்திருப்பினும் மனித வளத்தைக் காணுமே.

ஆதிநா :— உலகத்தில் உள்ள அதிசயங்களில் இதுவும் ஒரு அதிசயந்தான்.

கோவிந் :— நாம் யாவரும் உப்பு நீரில் - கடலில் விழுந்தோம். உடைகளில் ஈரமில்லை, பிசுபிசுப்பில்லை. அவற்றில் வழவழப்பும் மினுமினுப்பும் தோன்றுகின்றன. இது ஒரு அதிசயமல்லவா ?

அமணன் :— அவர் உடையைப் பற்றிப் பேசுகிறுர். அவர் சட்டையைப் பேசச்சொன்னுல் அது ஒரு கதையே சொல்லும்.

கோவிந் :— நமது உடைகள் நமது அரசனின் பெண் திருமணத்துக்குச் சிங்கப்பூர் சென்றபோது எவ்வளவு அழகாக இருந்தனவோ அவ்வளவு அழகாக இப்போது இருக்கின்றன. திருமணத்தில் ஏற்பட்ட உடையழுக்கெல்லாம் திரும்பிவரும்

# இலக்கியத் திறனாய்வாளன்

இரா. இளந்திரையன், B. A. (Hons),



'திறன் ஆய்வு' என்பது ஒன்றன் தகுதியை ஆராய்ச்சி செய்தல் என்று பொருள்படும். எனவே இலக்கியத்தை ஆராய்ச்சி செய்தல் இலக்கியத் திறனாய்வு எனப்படுகின்றது. மேலை நாடுகளில் இலக்கியத் திறனாய்வு என்னும் துறை பத்தொன்பதாம் நூற்றாண்டில் மிகுதியாக வளர்ந்தது. அவ்வளர்ச்சியைப் பின்பற்றி நமது நாட்டிலும் அத்துறை இப்போது பெருகி வருகின்றது. இந்த நேரத்தில் இலக்கியத் திறனாய்வின் தன்மைகளைப் பற்றிச் சிந்தித்து, அதற்குச் சில வரையறைகள் அமைத்தல் வேண்டற்பாலதாகும்.

வாழ்க்கையை ஆராய்வது இலக்கியம். ஓர் ஆசிரியன் ஒரு தனிமனிதனின் அல்லது ஒரு சமூகத்தின் வாழ்வைப் பற்றிச் செய்யும் ஆராய்ச்சியே இலக்கியமாகிறது. இதுபோலவே ஓர் இலக்கியத்தைப் பற்றிச் செய்யும் ஆராய்ச்சியே திறனாய்வு (அல்லது 'விமரிசனம்') எனப்படும். சமூக வாழ்வைப் பற்றிய ஆராய்ச்சியில் ஓர் இலக்கிய ஆசிரியன் எந்தெந்த முறைகளைக் கையாளுகின்றானோ, அம்முறைகளையே இலக்கிய ஆராய்ச்சியாளனும் இலக்கிய ஆராய்ச்சியில் பின்பற்ற வேண்டும். சமூகத்தில் நல்லனவற்றைப் பாராட்டித் தீயனவற்றை ஒதுக்கித் தள்ள ஓர் ஆசிரியனுக்கு எவ்வளவு உரிமை உண்டோ அவ்வளவு உரிமையும் இலக்கிய ஆராய்ச்சியாளனுக்கும் உண்டு இலக்கியத்தைப் பொறுத்தவரையில்,

**முதற் பாடம்** :— சமூகத்தை ஆராயும் இலக்கிய ஆசிரியன் சிற்சில கேள்விகளை எழுப்பிக்கொண்டு முன்னேறுகிறான். சமூகம் எப்படி இருக்கிறது? அதில் என்னென்ன இருக்கின்றன? அவற்றுள் எவை சிறந்தன — எவை சிறப்பில்லாதன — அவ்வாறு கருதக் காரணமென்ன? சமூகத்தில் இருக்கவேண்டிய எது இல்லாதிருக்கின்றது? அதை எப்படிச் சமூகத்தில் படைக்கலாம்?... இந்தக் கேள்விகளுக்கு அவன் காணும் விடை

களே இலக்கியமாக உருப்பெறுகின்றன. இவ்வினுக்களுக் குரிய விடைகள் நேர்முகமாகவும் கூறப்படலாம். மறைமுக மாகவும் கூறப்படலாம். நேர்முகமாகக் கூறுவதினும் மறைமுக மாகக் கூறுவதே சுவையும் பயனும் மிக்கதாக இருக்கும்.

ஓர் இலக்கியத்தை ஆராய முற்படுவோனும் மேற்குறிப் பிட்ட விஞக்களேயே முதலில் எழுப்பிக்கொண்டு அவற்றுக்கு அவ்விலக்கியத்திலிருந்து விடைகாண முயலுகிருன். ஓர் இலக்கியம் சமூகத்தைப் பற்றி ஒருவன் செய்த முடிவு. அவன் செய்ததே இறுதியான முடிவு என்று யாரும் கூறிவிட முடியாது. இலக்கியத் திறனுய்வும் அவ்வாறே. எனவே ஓர் இலக்கியத்தை ஆராய்ந்து தம் கருத்தை வெளியிடும் உரிமை எல்லோருக்கும் உண்டு. அக்கருத்தை ஆராய்ந்து, ஏற்கவோ தள்ளவோ பிறருக்கும் உரிமை உண்டு. இதுதான் இலக்கிய ஆராய்ச்சியில் முனேவோர் கற்க வேண்டிய முதற்பாடம்.

நம்மில் ஒரு பகுதியினர் இலக்கிய ஆராய்ச்சி என்பது, இலக்கியத்தில் குற்றமே காண்பது என்று எண்ணுகின்றனர்; மற்ருெரு பகுதியினர் புகழ்மாலேயே பாடுவது என்று எண்ணு கின்றனர். இருவரின் கொள்கைகளும் ஏற்றுக்கொள்ளக் கூடியன அல்ல. ஏனெனில், முதல் பகுதியினர் எழுதியவனின் தகுதியை வேண்டுமென்றே குறைத்து மதிப்பிடுகின்றனர்; மற்றவர் வேண்டுமென்றே உயர்த்தி மதிப்பிடுகின்றனர். இலக் கியத்திலுள்ள குற்றத்தைக் காண்பது போலவே அதன் உயர் வையும் காணவேண்டும். அதற்கு நடுநிலேயான உள்ளம் வேண்டும். அஃதில்லார் இலக்கியம் படைத்தலும் தீது; இலக் கிய ஆராய்ச்சியில் ஈடுபடுதலும் தீது.

**ஆராய்ச்சியாளனின் கடமை :—** இலக்கியத்தை ஆராயத் தொடங்குமுன், 'இலக்கிய ஆசிரியனும் நம்மைப் போன்ற மனிதனே' என்னும் எண்ணத்தை நினேவுபடுத்திக் கொள்ளவேண்டும். அந்த நினேவு அவனேப் பற்றிய தவருன கணிப்புக்கு நாம் சென்றுவிடாதபடி நம்மைக் காக்கும். எந்தத் துறையிலும் எந்தப் படைப்பும் என்றும் முழுமையை எய்தி

விடுவதில்லை. எனவேதான் நமது இலக்கிய ஆசிரியர்கள் அவையடக்கமாக,

"குற்றம் களைந்து குறைபெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்"

எனக் கூறியுள்ளனர். ஆன்றமைந்த அறிஞர்களின் அறிவுப் பெருக்கப் பணிவையே இது காட்டுகின்றது என எண்ணி இத்தொடரைத் தள்ளிவிடுவது, இலக்கிய ஆசிரியர்களைப் பற்றி நாம் தப்புக் கணக்குப் போடுவதாகவே முடியும். '**குற்றம் களைந்து, குறைபெய்து**' என்னும் இரண்டு தொடர்களும் இலக்கிய ஆராய்ச்சியாளருக்கு மிக இன்றியமையாத குறிப்புகளை உணர்த்துவனவாம். தான் எடுத்துக்கொண்ட பொருளுக்கு அதிகமாகவோ, ஒவ்வாத விதமாகவோ கூறுவது குற்றத்தின்பாற்படும்; கூறவேண்டியனவற்றையும் கூறாது விடுதல் குறையின் பாற்படும். முன்னது வேண்டாதது எனவும், பின்னதற்கு இன்னின்னவற்றைச் சேர்க்க வேண்டும் எனவும் எடுத்துக்காட்ட வேண்டுவது திறனாய்வாளனின் கடமையாகும். அதைவிடுத்து, ஓர் ஆசிரியனின் ஒவ்வோரெழுத்தும் குறை நிறை காட்டமுடியாத அளவுக்குச் செப்பமுற்றே இருக்கும் என்று எண்ணிக்கொள்வது வெறும் பாராட்டாக இருக்க முடியுமே தவிர; நல்ல ஆராய்ச்சியாக இருக்க இயலாது.

சமூகம் வளர வளர அதன் எண்ணங்களும் வளர்ந்து வருகின்றன. அந்த வளர்ச்சி சிலவற்றைக் களைந்தும், சிலவற்றை மாற்றியும், வேறு சிலவற்றைப் புதிதாக ஏற்றும் விளங்குகின்றது. சமூகத்தின் எண்ணங்களையும் போக்கையும் பெரிதும் தழுவி எழுகின்ற இலக்கியங்களிலும் நாளடைவில் மாறுதலடையும் அல்லது இறந்துபடும் கருத்துக்களும் இடம் பெற்றே இருக்கும். எந்த ஓர் இலக்கியத்திலும் சில பல கருத்துக்கள் மட்டுமே எக்காலத்திற்கும் ஒப்ப முடிந்தனவாக அமைய முடியும். மற்றக் கருத்துக்கள் காலத்தின் வளர்ச்சியில் வளர்ந்தும் திரிந்தும் சமூகத்தோடு ஒட்டிக்கொள்வதுண்டு. இம் மாறுதலை ஏற்க முடியாதவை இறந்துபடும். அத்தகைய கருத்துக்களைக் காலத்துக்கு ஒவ்வாதன என்று சுட்டிக் காட்டுவது

இலக்கிய ஆராய்ச்சியாளனின் கடமையாகும் அவ்வாறு சுட்டிக் காட்டுதல் நூலின் பழிப்புரை அல்லது இழிப்புரையாக மாறிவிடுதல் கூடாது. அத்தகு கருத்துக்களைப் பொறுத்த வரையில், அவற்றிற்குத் தற்போதுள்ள தகுதி இன்னது என்று ஆராய்ந்து முடிவு செய்தல் வேண்டும்.

காய் கனி கிழங்குகளைப் பச்சையாக உட்கொண்ட மனிதன் அவற்றையே வேகவைத்து உண்ணக் கற்றுக்கொண்டான்; மானங்காக்க மர இலைகளையும் தழைகளையும் பயன்படுத்திய மனிதன் துணி நெய்து பயன்படுத்தத் தொடங்கினான். முன்னர் வாழ்ந்த மரங்களையும் குகைகளையும் விட்டு விலகி மாடி வீடு கட்டி வாழ முற்பட்டான். இவை மனிதனின் உணவு, உடை, உறைவிடம் என்பனவற்றில் ஏற்பட்டுள்ள வளர்ச்சிகள் இம் மூவகைத் தேவைகளைப் பற்றி அவன் கொண்டிருந்த பழைய கொள்கைகளை ஏற்பாரும் போற்றுவாரும் இன்றில்லை. யாரேனும் அவ்வாறிருப்பதாகத் தெரிந்தால் உலகம் அவரை எள்ளி நகையாடும். எனினும் இப் பண்டைய பழக்க வழக்கங்களை இழித்துரைப்பதில் சிறப்போ பயனோ இல்லை. அக்காலத்திற்கு ஏற்றன என்று அவற்றை அகற்றிவிடுதலே முறை. இலக்கியத்துள் வரும் வழக்கிழந்த அல்லது காலத்துக்கு ஒவ்வாத கருத்துக்களுக்கும் ஆராய்ச்சியாளன் இந்த முடிவே தரவேண்டும்.

என்றும் இறவாதனவாகிய கருத்துக்களும் இலக்கியங்களுள் காணக்கிடக்கும். அவற்றை முன்னர்க் கண்டு கூறியதற்காக அவற்றின் ஆசிரியர்களைப் பாராட்டுதல் வேண்டும் என்றும் பயனறவறியா இயல்பினதாகிய நெருப்பையும் அதை உண்டாக்கும் முறைகளையும் கண்டுபிடித்துக் கொடுத்த நம் முன்னோரின் அறிவுத் திறனை நாம் பாராட்டுகிறோம். இதே போல் வாழ்க்கையின் அடிப்படை உண்மைகளை வடித்தெடுத்து வைத்திருக்கும் பெரும்பாலான சங்கப் பாடல்களின் ஆசிரியர்கள் என்றென்றும் நம் பாராட்டுதல்களைப் பெற்றே தீரவேண்டும்.

இனி, ஆசிரியனின் இலக்கிய அமைப்புத் திறனையும் திறனாய்வாளன் நுணுகி ஆராயவேண்டும். இலக்கியம் அமைக்

கும் திறன், அஃதாவது கூறவிரும்பிய கருத்தை அல்லது நிகழ்ச்சியை மற்றவர்கள் எளிதில் விளங்கி ஏற்றுக்கொள்ளும் வகையில் அமைப்பது ஆசிரியனின் தனித் திறமையாகும். சான்றாக, காதல் என்னும் ஒரே பொருள் பற்றிப் பல ஆசிரியர்கள் எழுதியுள்ளனர். இந்த நிலையில், அப் பொருளை அவ்வாசிரியர் கூறியுள்ள முறையிலிருந்தே அவரின் தகுதியைக் கணிக்க முடியும். இத்துறையில் பெறும் வெற்றியே ஆசிரியனுக்குச் சிறந்த வெற்றியாகும்.

"விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின்' (குறள்)

என்னும் உரை இதனை நன்கு விளக்குவதாகும். இத்துறையில் ஆசிரியனின் தகுதி என்ன என்று காண்பதே இலக்கியத் திறனாய்வின் சிறந்த பகுதியாகும்.

இலக்கியத்தில் காணப்படும் புதிய கருத்துக்களும், காலம், இடம் முதலியவற்றால் வீழ்ந்துபடாத கருத்துக்களும் அவற்றைப் படைப்பவனின் சிந்தனை வளத்தைக் காட்டும்; சுவைபட எழுதிக் காட்டும் ஆற்றல் அவனது ஆசிரியத் தன்மையைக் காட்டும். இவ்விரண்டில் முன்னதை விடப் பின்னதே சிறந்தது, என்று கொள்ளப்படுகின்றது. ஏனெனில் கூறும் ஆற்றலினாலேயே தன் கருத்துக்கு மற்றவர்களை ஒப்புதலளிக்கச் செய்கிறான் ஆசிரியன். ஒன்றை எந்த நிலையிலிருந்து அவன் காணுகிறானோ அதே நிலையிலிருந்து அதனை மற்றவர்களும் காணுமாறு செய்வது அவனது இந்த ஆற்றலேயாகும். இவ்வாற்றலில்லார் நல்ல கருத்துக்களை உடையாரேனும் அவற்றால் பிறர்க்கும் பயனில்லை அவர்க்கும் சிறப்பில்லை.

"இணரூழ்த்தும் நாறா மலரனையர் கற்ற(து)
உணர விரித்துரையா தார்" (குறள்)

அன்றோ? எனவே இத்துறையில் இலக்கிய ஆசிரியன் எந்த அளவுக்கு வெற்றிபெற்றுள்ளான் என்பதைத் திறனாய்வாளன் காய்தல் உவத்தல் அகற்றி ஆய்ந்து காணவேண்டும்.

இலக்கியத் திறனாய்வாளன் இலக்கியத்தைப் பற்றிய தனது முடிவான எண்ணத்தை வெளியிடுபவனே என்று முன்னர்க்

கண்டோம். ஆதலின் தான்கூறும் முடிவுக்குத் தகுந்த காரணம் காட்டி அதனை நிறுவ வேண்டுவது அவனது முக்கியமான கடமையாகும். இலக்கியத்தில் குறைபாடு ஏதேனும் அவன் சுட்டிக் காட்டுவதானால் அக்குறை இல்லாதிருக்க ஆசிரியன் என்ன செய்து இருக்கவேண்டும் என்பதையும் தக்க சான்றுகளுடன் எடுத்துக் காட்டவேண்டும். அப்படியானால்தான் தனது கடமையைச் சிறப்புற நிறைவேற்றியவனாக அவன் கருதப்படுவான்.

இலக்கியத்திற்கும் இலக்கியத் திறனாய்விற்கும் உள்ள அடிப்படை ஒற்றுமையை முதலிற் கண்டோம். இலக்கியத்தின் நோக்கம், இருக்கின்ற சமூகத்தை எல்லாரும் தெரிந்துகொள்ளச் செய்வதும், அதிலிருந்து புதியதும் இருப்பதைவிட நல்லதுமான சமூகத்தை எப்படி அமைப்பது என்பதற்கு வழிகாட்டுவதுமாகும். இலக்கியத் திறனாய்வும் இலக்கியத்தை நன்கு அறிந்து சுவைக்கவும் அதைவிட நல்ல இலக்கியத்தைப் படைக்கவும் வழிகாட்டவேண்டும். இச் சீரிய நோக்கத்தை நிறைவேற்றிவைப்பவனே நல்ல இலக்கியத் திறனாய்வாளனாவான்.

---

**காதல் இருவர் கருத்தொருமித்தல்.**



எழுதரு மதியங் கடற்கண்டாஅங்
கொழுகு வெள்ளருவி யோங்குமலை நாடன்
ஞாயி றனையன் றோழி
நெருஞ்சி யனைய வென்பெரும்பணைத் தோளே.

—குறுந்–315.

# பாரதியாரும் மெய்ப்பாடும்.

[வித்துவான் அ. வேங்கடாசலம்]
தமிழாசிரியர். திட்டைக்குடி.

அமரகவி சுப்ரமண்ய பாரதியாருக்கும், மெய்ப்பாட்டிற்கும் யாது தொடர்பு என்று நோக்கும்போழ்து; சூரியனுக்கும் ஒளிக்கும் உள்ள தொடர்பினைப் போல, — இரு கண்களில் அமைந்த மணிப்பாவைக்கும், ஒளிக்கும் உள்ள தொடர்பினைப் போல, - சிந்தைக்கும் மொழிக்கும் உள்ள தொடர்பினைப்போல ஒன்றி இணைந்து, பாரதியே மெய்ப்பாடு, மெய்ப்பாடே பாரதி என்று உறுதியாய்க் கூறலாம்.

மெய்ப்பாடு என்பது பொருட்பாடு என்றும், உலகத்தார் உள்ளத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சியை அந்த இடத்தில் நிகழ்ந்தவாறே புறத்தாருக்குப் புலப்படுவதொரு வழியால் வெளிப்படுத்தல் என்றும்; தொல்காப்பியத்திற்கு உரை எழுதிய பேராசிரியர் கூறுவர். எனவே உள்ளத்தில் தோன்றிய ஓர் செய்கை கண்ணீர் அரும்பல், மெய் மயிர் சிலிர்த்தல், வெகுளிச் சொல் போன்ற வேறுபாட்டால் நாம் மெய்ப்பாட்டை அறியக்கூடும்.

> "நகையே அழுகை இளிவரல் மருட்கை
> அச்சம் பெருமிதம் வெகுளி உவகை என்று
> அப்பால் எட்டே மெய்ப் பாடென்ப"

என்ற தொல்காப்பியச் சூத்திரத்தால் மெய்ப்பாடு எட்டு வகை என்பதை அறிகின்றோம். செஞ்சாந்து வீசினாலும்; கத்தியால் செத்திப் போழ்ந்தாலும் நெஞ்சு ஓர்ந்து ஓடா நிலைமையதாகிய சமநிலை என்ற மெய்ப்பாட்டைத் தொல்காப்பியர் கூறவில்லை. அதற்குக் காரணம் இலக்கணம் வரையறுக்க உலகியல் நூல் கூறுகின்றார் ஆதலாலும்; அதனிடத்து ஓர் மாறுபாடு இல்லாததாலும், நாடக நிலைக்குச் சமநிலை வேண்டப்படுவதாலும் அதனை விடுத்தார், எனவே நடுவுநிலையையும் சேர்த்துச் சுவை ஒன்பது என்ற முடிவுக்கு வரலாம்.

மனத்தைக் கிளர்ச்சி செய்யும் ஈட்டி போன்ற சொற்களை விட உள்ளத்தை மகிழ்வு பொங்கச் செய்யும் சொற்களை

மேலானவை என்ற கொள்கையினைப் பாரதியார் உணர்ந்தார். அதுபோழ்து நாட்டு மக்கள் அடிமைச் சேற்றில் ஆழ்ந்திருப்பதைக் கண்டார். வறுமையால் வாடும் மக்களைக் கண்ணுற்றார். கல்வி வாடையற்ற மக்கள் பலரை நோக்கினார். இச் செயல்களை அடிக்கடி ஆராய்ந்தார். அதன் விளைவாக உள்ளம் குமுறி எரிமலைக் குழம்பாகித் திடீரென வெடிக்கும் பூகம்பத்தைப் போலக் கவிதை பொழிந்தார். அக்கவிதையுள் ஒன்பது சுவைகளையும் எவ்வெவ்வாறு கூறியுள்ளார் என்று ஆராய்வோம்.

**நகைச் சுவை :—** இயற்கைக்கு மாறாக அல்லது புறம்பாக எதையாகிலும் உணர நேர்ந்தால் அது நகைப்பிற்குரியதாகிவிடுகின்றது. மிகவும் உயர்ந்த இலட்சியத்தைக் கேள்வியுற்று அதற்கு மாறாகத் தாழ்ந்த இலட்சியத்தைக் கேள்வியுற்றால் நகை தோன்றுகின்றது. என்றெல்லாம் எண்ணுவம். இது உலகோர் இயல்பு. பாரதியார் வெள்ளை ஏகாதிபத்திய ஆட்சியினர் முன், பாரதநாட்டு மக்கள் கைகட்டி, வாய்பொத்தி நிற்பதைக் காண்கின்றார். அதுபோழ்து பெருமை கொண்ட பாரதநாட்டு மக்கள் தன்மானம் அற்றுக் கைகட்டுவதா? இது மிகவும் பேதமையானது அதோ! பரந்து கிடக்கும் வானம், பூமியெங்கும் ஒரே இருள். அவ்விருளைப் போக்கும் சூரியன். அச் சூரியனை வெளிநாட்டிலிருந்து ஒருவன் விலைக்குக் கேட்க அதற்கிசைந்து அவனிடம் கொடுத்துவிட்டு நம்முடைய பாரத தேசத்தில் உள்ள மக்கள் எல்லாம் ஒன்றுகூடி மினுக்கு மினுக்கு என்று ஒளி காட்டும் மின்மினிப் பூச்சியை வாங்குவார்களா? வாங்குவதற்குத்தான் மனம் இசையுமா? மனமே இசைந்து வாங்குவார்களேயானால் பேதமை என்று உலகத்தார் இகழமாட்டார்களா? என்று பிறனுடைய இழிவான பேதமைச் செயலைக் கண்டு நகைக்கின்றார். எண்சாண் உடலுக்குத் தலை மிகச் சிறந்தது. தலையினும் மிகச் சிறந்தது கண். அக் கண்ணினும் மிகச் சிறந்தது நம்முடைய சுதந்திரம். அச் சுதந்திரத்தை வெள்ளையர்கள் பறித்துக் கொண்டனர். அச் சுதந்திர உரிமை அகன்றும் உயிர் வெல்லம் என்று எண்ணிப் பாழும் வயிற்றுப் பசியினைப் போக்க கைகட்டி வாழ்ந்தனர் என்ன அறியாமை. மண்ணிலே தோன்றும் பொருள் அனைத்தும் மனிதனுக்கே ஆக்கப்பட்டிருக்கின்றன.

அத்தகைய இன்பப் பொருளை மனிதன் அனுபவிப்பதற்கு எண்ணம் தோன்றுவது இயல்பே. ஆதலால் இன்பத்தில் மூழ்கி இறுமாந்து போகாது கண்விழிப்புடன் உரிமையின் பெருமையை மறக்கலாமா? ஆயிரம் மூட்டைப் பவுன்களைக் கொண்டுவந்து கொடுத்து நம்முடைய இரு கண்களை விலைக்குக் கொடு என்று கேட்கும்போழ்து பணவெறியால் கண்கள் இரண்டையும் விற்றுவிட்டு, அழகிய சித்திரங்களை இலவசத்தில் பெற்று மகிழ்கின்ற போழ்து கண்ணிலாக் குருடனும் செவி மடுத்த போழ்து நகைப்பான் அல்லவா? இத்தகைய பேதைமைச் செயலில் ஈடுபட்டு நகைப்பிற்குரியவர்களாக முன்னாளில் பாரத நாட்டு மக்கள் இருந்தனர் என்று பேதைமைக் குணத்தைப் போக்க பாரதியார் நகைக்கின்ற அந்நகைப்பு கவியாக:-

> மண்ணில் இன்பங்களை விரும்பிச் சுதந்திரத்தின்
> மாண்பினை இழப்பாரோ.
> கண்ணிரண்டும் விற்றுச் சித்திரம் வாங்கினால்
> கைகொட்டிச் சிரியாரோ"— என்று நவில்கின்றார்.

**அழுகைச்சுவை:—** பிறனால் இகழப்பட்டு எளியராகும்போழ்தும்; தந்தை, தாய், சுற்றம், மனைவி, மக்கள், பொருள் முதலியவற்றை இழந்த சமயத்திலும்; பல்வேறு தொல்லைகளில் ஈடுபடும் நிலையிலும் அழுகை தோன்றும். இது உலகோர் இயல்பு. பாரதியார், பாரதநாட்டு இந்துப் பெண்மணிகளைப் பிஜிஸித் தீவில் காண்கின்றார். இப் பெண்மணிகள் பிறந்த நாடாகிய இந்தியாவை விட்டு பிஜிஸித் தீவிற்கு வரக் காரணம் என்ன என்று ஆராய்கின்றார்.

இந்திய நாட்டில் கங்கை, பொருநை, யமுனை ஓடுகின்றன. வற்றாத காவிரியாறானது நீர்ப் பெருக்கால் வளத்தை எங்கும் பரப்புகின்றது. இன்னும் பல நதிகள் பல பகுதிகளில் வளத்தைத் தர, இப் பெண்மணிகள் பிஜிஸித் தீவில் கூலிகளாய்த் திகழ்வதேன். வளம் உள்ள நாடுதான். இது உலகறிந்த உண்மை. பசுவின் காம்பினில் பால் மிகவும் சுரந்துகொண்டு இருக்கும் சமயத்தில் பசுவிற்குரியவன் பாலைக் கறக்கும்போழ்து

கையில் உள்ள பாத்திரம் ஓட்டை உள்ளதாக இருந்தால் பசு வளப்பமாய் இருந்தும் கறப்பவன் நன் முறையில் கறந்தும் யாது பயன்?

அதுபோல வெள்ளையர்கள் பாரதநாட்டுப் பொருள்களைப் பறித்துக்கொண்டு போவதால் இந்த நாட்டுப் பெண்மணிகள் இந்த நிலைக்கு வந்தனர் என்று ஒரு முடிவுக்கு வருகின்றார். அதுமட்டுமல்ல, பிஜிவித் திவிலிருந்து வரும் காற்றைக் கண்ணால் நோக்குகின்றார். காற்றே! என்னுடைய பாரத நாட்டு இந்துப் பெண்கள் கரும்புத் தோட்டத்தில் கால்களும், கைகளும் சோர்ந்து செக்கு மாடுகள் போல் அடிமையாக்கப் பட்டு உழைக்கின்றார்கள். அச்சமயம் கொடுமை பொறுக்க முடியாது கண்ணீர் வடித்திருப்பார்கள். அச்சமயத்திலும் இந்திய நாட்டை இந்துப் பெண்கள் நினைத்திருப்பார்கள். இனி எக்காலத்தில் தாய் நாட்டைப் பார்ப்போம் என்று ஏங்குவதோடு வீட்டில் உள்ள தாயினையும் தந்தையையும் என்று காண்போம் இத் துன்பம் என்று ஆகலும் எனக்கூறி விம்மி விம்மி அழு திருப்பார்கள். துன்பக் கேணியில் அகப்பட்டு அழுது அழுது அழுவதற்கும் வலிவற்ற நிலையில் இருந்திருப்பார்கள். அச் சொற்களையெல்லாம் கேட்டிருப்பாய். ஆதலால் காற்றே அவர்கள் அடைந்த துன்ப நிலையினை மீண்டும் எனக்குச் சொல் என்று காற்றை நோக்கி வினவுகின்றார்.

பாரதியார் இந்துப் பெண்மணிகள் படும்பாட்டை பிஜிவித் தீவு மக்களிடம் கேட்காது காற்றை நோக்கி வினவுவதில் ஏதோ நமக்கே ஓர் வியப்பைத் தருகின்றது. காற்றில் இந்துப் பெண்மணிகள் படும் துன்பத்தைக் கேட்டுப் பாரதியார் யாது செய்யமுடியும்? அவ்வாறு கேட்டால் காற்றுதான் பதில் சொல்லுமா? அல்லது காற்றே பதில் சொல்லுவதாக இருந் தாலும் துன்பந்தான் நீங்குமா?

எனவே பிஜிவித் தீவினர் நேர்மை என்பதை இன்ன தென்றே அறியாதவர்கள். பெண் என்றால் பேயும் இரங்கும் அன்றோ? அப்பேயினும் கொடியவர்கள் அக் கொடியவர்களி டம் கூறி இந்துப் பெண்களுக்காக நல்ல தீர்ப்பை எதிர்பார்க்க

முடியாது. அக்கொடியவர் கொடுமை பொறுக்கமுடியாத இந்தப் பெண்மணிகள் அழுங்கூக்குரல் காற்றின்மூலம் பாரத பாரதநாட்டில் கேட்பதை அறிந்து ஏ! காற்றே அப்பெண் மணிகள் கூவி அழுததை மீண்டும் சொல் என்று கண்ணீர் வடிக்கின்றார். அக் கண்ணீர்த்துளியின் வழியாக

"அன்னை வீட்டை நினைப்பாரோ—அவர்
விம்மி விம்மி அழுங்குரல்
கேட்டிருப்பாய் காற்றே"

என்று கவிமழை பொழிகின்றார். ஆதலால் இங்கு அழுகைச் சுவை பொருந்தியிருப்பதை அறியலாம்.

**இளிவரல் சுவை:—** இச்சுவை இழிவுபற்றித் தோன்றுவதாகும். பாரதியார் பாரதநாட்டு மக்களை நோக்கி மிகவும் இழித்து வெறுத்து ஏ! மக்களே உங்களிடம் உடல் வலிவு இல்லை. நெஞ்செல்லாம் ஒடுங்கி விட்டது. முகத்தில் பொலிவு இல்லை. குரலில் நல்ல ஒலியில்லை. உடம்பிலும் ஒளியில்லை. நெஞ்சிலே ஓரே பயம். கீழ்மைத் தன்மையான செயலையே மிகவும் விரும்புகின்றீர்கள். நல்லதோர் கருத்தை நவில்வதற்கு அஞ்சுகின்றீர்கள். மாற்றான் ஒருவனிடம் வெட்கமில்லாது கெஞ்சி ஒன்றைக் கேட்டுக்கொண்டு நிற்கின்றீர்கள். இவையெல்லாம் போகட்டும்.

வாழும் இடமாவது தூய்மையாக வைத்திருக்கின்றீர்களா? என்றால் நீரும் சேறும் தங்கிய இடத்தில், தீய நாற்றம் வீசும் இடத்தில், தூசுகள் சேர்ந்த இடத்தில் சிறிய வீடுகள் கட்டுகின்றீர்கள். தூய்மையாக வாழவும், வாழும் இடத்தையும் செம்மையாக வைத்துக்கொள்ளவும் தெரியாதவர்களே! நீங்கள் எல்லோரும் சாதி நூறு சொல்லித் திரிகின்றீர்கள். நல்ல தருமத்தைச் செய்யமாட்டீர்கள். நீதி நூறு சொல்வீர்கள். ஆனால் பணத்தை நீட்டியவுடன் பல்லை இளித்து நீதியை மாற்றுகின்றீர்கள். தீமை செய்வதற்கு அஞ்சமாட்டீர்கள்.

இத்தகைய தீய எண்ணங்கொண்ட நீங்கள் என் முன் நிற்காதீர்கள். நல்ல ஒளியுள்ள மணியிலே களங்கம் போன்று

திகழ்கின்றீர்கள். ஆதலால் செல்லுங்கள் நிற்காதீர்கள்.

"சோதிமிக்க மணியிலே — காலத்தால்
சூழ்ந்தமாசு போன்றனே — போ—போ—போ"

என வெறுத்து இழிவுச்சுவை படக் கூறியதை அறியலாம்.

**மருட்கைச் சுவை :—** வியப்பை உண்டாக்கும் தன்மையது. பாரதியார் தமிழ்த்தாய் வடிவில் நின்று பாரத நாட்டு மக்களை நோக்கி ஏ! மக்களே என் உயிரை எமன் கொண்டு செல்ல முயற்சித்தான். என் தந்தையின் வலியாலும்; திறமை சான்ற புலவர்களின் தவவலியினாலும் அக் காலனின் முயற்சி மிகவும் பயனற்றுப்போயிற்று. அத்தகு சிறப்புடைய தமிழ் அன்னையாகிய என்னைக் கண்டு அறிவில்லாத ஓர் பேதை அச்சொல்லைக் கூறுவதற்கு ஒரு சிறிதும் தகுதியில்லாதவன் என்னை நோக்கி, தமிழன்னையே! புதிது புதிதான விஞ்ஞானக் கலைகள் எல்லாம், பஞ்ச பூதத்தின் நுட்பமான செயல்களெல்லாம் நெடுநாட்களாக ஆராய்ந்து ஆராய்ந்து பல நூற்களை இயற்றும் காரணத்தால் மேனாட்டில் உள்ள கலைகள் எல்லாம் ஓங்குகின்றது.

அத்தகைய மேன்மையான கலைகள் தமிழ் மொழியில் இல்லை. அக் கருத்துக்களைத் தமிழ் மொழியில் சொல்லவும் முடியாது. சொல்லும் திறமையும் தமிழ் மொழிக்கு இல்லை. எனவே தமிழ் இனிச் சாகும். மேற்றிசையில் உள்ள மொழிகள் எல்லாம் உயர்ந்து ஓங்கும் என்ற வார்த்தையைக் கேட்டேன் என் ஆருயிர் மக்களே இனி எது செய்வேன். அவன் கூறிய வார்த்தையானது உயிரைக் கொல்லும் தன்மையுடையதாக இருக்கின்றது என்று பாரதியார் மிக வெறுத்த நிலையில் தமிழ் அன்னை வடிவில் நின்று தன் மக்களுக்குப் புதிய சாத்திரம் எழுதும்படி வேண்டிக்கொள்ளும் நோக்கத்துடன்

"என்றந்தப் பேதை உரைத்தான் — ஆ
இந்த வசையெனக் கெய்திடலாமோ
சென்றிடுவீர் எட்டுத் திக்கும் கலைச்
செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்"

என மருட்கைச் சுவைபடப் பாடியதை அறியலாம்.

**அச்சச் சுவை:—** நாட்டிலே மக்களிடம் என்றும் நிலைத்து நிற்கும் தன்மையதாகும். பாரதியார் பத்து வயதாக இருக்கும்போழ்து பல இளைஞருடன் தொடர்பு வைத்திருந்தார். அந்த இளைஞரெல்லாம் ஓடியாடி விளையாடுவர். ஆற்றிலே நீர் போகும் வழியே செல்லாது எதிர்த்து நீந்த முயற்சிப்பார்கள். குட்டைகளில் ஓடி விளையாடிக் குதித்து நீந்தி நீரை எல்லாம் குழப்பிவிடுவார்கள். இலையடர்ந்த மரங்களில் ஏறி இறங்குவர். பாரதியார் அவர்களுடன் சேர்ந்து மகிழ்ந்து விளையாடுவார். இதனையறிந்த ஒவ்வொரு இளைஞனின் பெற்றோர்கள் சினங் கொண்டு அவர்களைக் கண்டித்து நல்வழியில் செலுத்த முயற் சித்தனர். இளைஞருக்கு விளையாட்டில் விருப்பம் அதிகமாக இருப்பதால் பெற்றோருக்குத் தெரியாமல் விளையாடுவர் பெற் றோருக்குத் தெரிந்தால் விளையாடிக்கொண்டிருக்கும் போழ்தே ஓடி வீட்டினுள் புகுந்துகொள்வார்கள். வீட்டினுள் தந்தை தொடர்ந்து சென்று கண்டிக்கும்போழ்து இனி அவ்வாறு செல்லமாட்டேன் என்று பொய் வாக்குறுதியெல்லாம் தருவர். இச் செயல் இளைஞரின் இயல்பு. விளையாடும் இளைஞரைத்தடை செய்தல் எவராலும் முடியாது.

ஆனல் பாரதியார் எவ்வாறு இருந்தார் என்று நோக்கும் போழ்து இவரும் விளையாட்டில் கலந்து மகிழ்ந்து இளைஞரு டன் விளையாடி இருப்பார். இச் செயல் தந்தைக்குத் தெரிய வந்தது. தந்தையார் பாரதியாரை நோக்கி அடே! பாரதி நீ இத்தகைய விளையாட்டில் கலந்து விளையாடக் கூடாது நட்பின ரோடு சேரவும் கூடாது என்று கட்டளையிட்டார். தந்தை யின் கட்டளை ஒருபுறம் ஈட்டிபோல் தாக்குகின்றது. விளை யாட்டில் ஆர்வம் மற்றொரு பக்கம் காந்தம்போல் ஈர்க்கின்றது. தந்தை சொல் மிக்க மந்திரம் இல்லை என்ற குறிக்கோள்கொண்ட பாரதியார் தந்தையின் வார்த்தைக்கு உட்பட்டு தெருவில் விளை யாடும் மற்றைய இளைஞருடன் சேர்ந்து விளையாடாது பல புத் தகங்களைப் படித்து அப் புத்தகத்தையே தோழனாகக் கொண்டு வேறு தோழர்களுடன் சேராது தனியராய் தந்தை வார்த் தைக்கு அஞ்சி வருந்தி வருந்தி இருந்தேன். என்னும் கருத் துப்பட:

"ஈண்டு பன்மரத் தேறி யிரங்கியும்
என்னொடு ஒத்த சிறியர் இருப்பதால்
வேண்டு தந்தை விதிப் பினுக்கு அஞ்சியான்
வீதியாட்டங்கள் ஏதிலும் கூடிலேன்"

என்று அச்சச் சுவைபடக் கூறியதை அறியலாம்.

**பெருமிதச் சுவை:—** வீரச்சுவையினைத்தான் பெருமிதம் என்று தொல்காப்பியர் கூறியுள்ளார். வீரம் எவ்வாறு பெருமிதம் ஆகும் என்ற ஐயம் தோன்றும். எல்லாரோடும் ஒப்பில்லாது பேரெல்லையாக நிற்றலின் பெருமிதம் எனப் பெயர் பெற்றதென்று பேராசிரியர் விளக்கம் கூறுவர்.

பண்டைக்காலத்தில் சிபிச்சக்ரவர்த்தி புறுவின் உயிரைக்காப் பாற்ற தன் தசையினைக் கொடுத்தான் என்று நூற்களில் படிக் கின்றோம். அச்செயல் பெருமிதமுடையதென்றும் அறிகின் றோம். சிபிச் சக்கரவர்த்தித் தன்னுடலின் தசையை ஒருபகுதி சதையை அறுத்து முதலில் வைத்தபோது பருந்தின் அளவுக் குச் சரியாக இல்லாததால் மீண்டும் தசையை அறுத்தான். தசையை ஒரு பகுதி அறுத்தால் எஞ்சிய உடலைக்கொண்டு உயிர் வாழலாம் என்ற எண்ணம் அந்த அரசன் உள்ளத்தில் தோன்றி யிருக்கும். ஆகவே, அச்சிபியின் செயலைவிட பாரதியாரின் பெருமிதம் மிக்குயர்ந்து விடுகின்றது.

பாரத நாட்டினரை வந்தேமாதரம் என்ற ஒலியை ஒலிக்கக் கூடாது என்று வெள்ளை ஏகாதிபத்திய ஆட்சியினர் சட்டத்தின் மூலம் பயங்காட்டினர். அடே! வெள்ளை ஆங்கிலேயரே! உங் கள் அணுக்குண்டானது எங்கள் உடலில் பாய்ந்து அதன் கார ணமாக உடல் நொந்திருக்கும் இந்த நிலையிலும் வந்தேமாதரம் என்று சொல்லுவோம். என்புதோல் போர்த்த இவ்வுடம்பினைப் பெருந்தீயில் வேண்டுமாயினும் போட்டுப் பொசுக்கினாலும்; அவ் வாறு பொசுக்கி உடல் எரியும்போழ்து வந்தேமாதரம் என்ற ஒலியை மிகவும் உவந்தே சொல்லுவோம் என்று கூறுவதால் பாரதியாரின் சுதந்திர தாகம் எந்த அளவில் உச்சத்தில் இருந் தது என்பதை அறியலாம். இக்கருத்தை

"நொந்தே போயினும்
வெந்தே மாயினும்
நந்தே சத்தார்—உ
வந்தே சொல்வது — வந்தேமாதரம்!! என்ற

பாடலில் காட்டும் பெருமிதச் சுவையை அறியலாம்.

**வெகுளிச் சுவை :—** பாரதியார் ஆங்கிலேயனாக உரு வெடுத்து தேச பக்தன் ஒருவனை நோக்கிக் கூறும்போழ்து அடே தேசபக்தா... வெள்ளம்போல் திரண்டு கூட்டம் கூடி வந்தேமாதரம் என்ற ஒலியைக் கூவி, வாணிகம் செய்வோனாகிய எங்கள் பரம்பரையாகிய எங்களுக்கு எதிராகக் கப்பலை ஓட்டுகின் றீர்கள். சட்டத்தை மீறுகின்றீர்கள். அடிமைப் பேடிகளை மனிதனாக ஆக்கினீர்கள். அத்துடன் எங்களுடைய இரகசியப் பூட்டுக்களையெல்லாம் உடைத்துத் தூள் தூளாக்கிவிட்டீர்கள்.

எங்கும் சுதந்திர உரிமை வேண்டும் என்ற விதையினை மக் கள் உள்ளத்தில் தூவி விட்டீர்கள். இதோ பார்! உன்னைச் சுட்டு வீழ்த்தி அறிவு புகட்டுகின்றேன். சட்டத்தை மீறினால் ஈட்டியால் குத்திக் கொல்கின்றேன். எதிர்த்துப் பேசினால் சிறையினுள் அடைக்கின்றேன் என்று தீப்பொறி பறக்கக் கூறினார்.

அவ்வாறு கூறிய ஆங்கிலேயனுக்கு எதிர்த்து அறிவுகூற பழைய உருமாறி தேசபக்தனாக நின்று, ஏ! வெள்ளைக் கூட் டங்களே, உங்களுக்கு அடிமைத்தொழில் செய்து அடிமையாக வாழ்ந்தோம். இன்னமும் எங்களை ஏமாற்ற முடியாது விழித் துக்கொண்டோம். உங்கள் சூழ்ச்சிக்கு இடங்கொடோம். நாங்கள் முப்பதுகோடி மக்களும் நாய்கள் என்று எண்ணி இறு மாந்தீர்களா? அல்லது பன்றியின் சேய்கள் என்று உன்னினீர் களா? நீங்கள் மட்டும் மனிதர்களோ. இதுதான் நீதியா— அரசர்களாகிய உங்களுக்கு அழகா? உங்கள் பிடிவாதமே பிடி வாதமா? நாங்கள் மனிதர்கள் அல்லரா என்று வெகுண்டு

"நாங்கள் முப்பது கோடி சனங்களும்
நாய்களோ பன்றிச் சேய்களோ
நீங்கள் மட்டும் மனிதர்களோ—இது
நீதமோ பிடி வாதமோ" என்று கூறுகிறார். இத
னுள் வெகுளிச்சுவை அமைந்திருப்பதை அறியலாம்.

**உவகைச் சுவை :—** பாரத நாட்டு மக்கள் அடிமை வாழ்வில் பல்லாண்டுகள் மூழ்கிக் கிடந்தவர்கள் வெள்ளைக்காரரின் ஆட்சியினின்றும் விடுதலை பெறவேண்டும் என்ற எண்ணத்தில் பாரதியார் திண்ணமாக இருந்ததால் பாரத நாட்டு மக்களை எல்லோரும் அடிமை விலங்கைத் தகர்த்தனர். எல்லோரும் ஓர் இனம் என்ற கொள்கையை அறிந்து சாதிமத வேறுபாட்டை ஒழித்தனர். கைகட்டி வாழும் வாழ்க்கையினை முறியடித்தனர். ஏய்த்துப் பிழைத்தவர்களுக்கெல்லாம் சாவுமணி அடித்தாகிவிட்டது. நயவஞ்சகர், செப்பிடுவித்தைக் காரர். உயர்வு தாழ்வு என்று கூறித் திரிபவர் அனைவரும் வெட்கித் தலைகுனிய வேண்டிய நிலை வந்துவிட்டது. மனிதனுக்கு உண்ணும் உணவு மிகவும் முக்கியமானது. எத்தொழில் செய்வோரும் உழவனின் உதவியை நாடவேண்டியிருக்கிறது. இதனாலன்றோ "சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம்" என்று வள்ளுவர் கூறினர்.

இதை அறிந்த பாரதியார் உழவுத் தொழிலுக்கும் கைத்தொழிலுக்கும் பாரத நாட்டோர் அனைவரும் வணக்கம் செய்வோம். வீண் வம்பர்களை நாட்டில் இனிப் பெருக விடமாட்டோம். பாரத நாடு பாரத நாட்டினருக்கே உரிமையுடையது. ஆதலால் இனி எவர்க்கும் அடிமை செய்யமாட்டோம். அங்கு இங்கு எனாதபடி எங்கும் பரந்து ஒளி மயமாய் நிற்கும் ஆண்டவனுக்கே அடிமைசெய்து வாழ்வோம் என்று முரசுகொட்டி, சங்கு ஊதி அனைவரும் ஒன்றுசேர்ந்து பள்ளுப் பாடுவோம். சுதந்திரம் பெற்றோம் என்று இறும்பூது எய்துவோம் என

ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே—ஆனந்த
சுதந்திரம் அடைந்துவிட்டோம், என்று சுதந்திரம் வரு

வதற்கு முன்னரே வந்ததாக எண்ணி உவகைச் சுவைபடப் பாடியிருப்பதை நாம் அனைவரும் அறிவோம்.

நடுவு நிலை :— நாட்டில் வாழும் அனைவரும் தனக்கு வேண்டியவனாக, பொருளுதவி செய்தவனாக, உறவினனாக இருந்தால் அவர்களிடம் தனிப்பற்றும் மதிப்பும் கொள்கின்றனர். இது கண்கண்ட உண்மை. ஆனால் இதன் காரணமாகத் தோன்றும் சில விளைவுகள் நாட்டையே அதிர்ச்சி அடையச் செய்துவிடுகின்றது. கடமை தவறி நேர்மையினின்றும் விலகி நல்லவனைக் கெட்டவனாகவும், கெட்டவனை நல்லவனாகவும் தீர்ப்பு அளிக்குமாறு தூண்டுகின்றது. இத்தகைய நிலை என்றும் இருப்பதால் பாரதநாட்டு மக்களை நோக்கி, மக்களே! ஏட்டில் கூறும் நீதிகளைப் புரட்டிப் படிப்பதால் உங்களிடம் நேர்மை உண்டாகும் என்று எண்ணுகின்றீர்கள். அவ்வாறே முயற்சிக்கின்றீர்கள்.— போலித்தனமாக. உங்கள் முயற்சி உண்மையிலேயே நடைமுறையில் செயலாற்ற வேண்டுமேயானால், நூற்களைப் பயின்று அதன் வழிநிற்கப் பெரும்பாலும் முயற்சி செய்யுங்கள், மகிழ்கின்றேன். ஆனால் அந்த ஏட்டிலே கண்ட உண்மையோடு ஒழுகுவதற்கு, ஓர் நல்ல வழி கூறுவேன்.

நாட்டிலே வாழும் மக்கள் பலர். அவர்களுக்குள் பல்வேறு வேறுபாடு. எண்ணிலாப் பிணக்குகள். கண்ணொளி மழுங்கியோர் பலர். கதிரவனை நோக்கிக் கடுஞ்சின உரைகள் பற்பல கூறுவர். எளியவனை வலியவன் தாக்கும்போழ்து எளியவன் சூரியனை நோக்கி, அடே! சூரிய நாராயணா, உனக்குக்கூட கண் இல்லையா. இங்கக் கொடுமையெல்லாம் பார்த்து வழிதே செல்கின்றாயே என்று இழித்துக் கூறும் இழிவுரைகள் பற்பலவாகும். ஒரு சிலர் வாழ்த்த மற்றொருவர் இகழவும் அனைவர்க்கும் ஒரே வித ஒளியைத் தந்து காக்கின்றான் சூரியன். புகழுகின்றவனுக்கும் இகழுகின்றவனுக்கும் பொதுவாக செம்மையான ஒளியினைத் தந்து நடுவு நிலையை மக்களுக்கு எடுத்துக்காட்ட கலங்கரை விளக்கம்போன்று விளங்குகின்றான். அச்சூரியனை எண்ணி கண்ணால்கண்டு நடுவு நிலைமை பயிலுங்கள் என்று பாரதியார் கூறினார்.

சூரியனைப் பார்த்தும் நடுவுநிலை பிறழும் சழக்கர் பலர் உண்டு என்று பாரதியார் கண்ணன் என் அருமைத் தோழன் என்று வரும் தலைப்பில்—வாழ்க்கையில் எவனுவது உண்மை தவறி ஒழுங்கு மாறுபட்டு நடந்தால் அவர்களைக் கண்ணன் மிகவும் உதைத்துத் துன்புறுத்துவான் என்று அறிவுறுத்துவதற்கு

"உண்மை தவறி நடப்பவர் தம்மை
உதைத்து நசுக்கிடுவான்" என்று கூறுவதால் நடுவுநிலையினை மக்களுக்கு எந்த அளவில் அறிவுறுத்திக் கூறியுள்ளார் என்பது நன்கு விளங்கும்.

ஆகவே, பாரதியார் பாடல்களில் ஒன்பது சுவைகளும் எவ்வெவ்வாறு கூறியுள்ளார் என்று இதுவரை ஆராய்ந்தோம். அவர் பாடலில் ஒன்பது சுவைகள் மட்டும் அல்ல. அரசியல் பொருளாதாரம், புரட்சிப் பாடல், விடுதலைப் பாடல், இன்னும் பல. மக்கள் எவ்வெவ்வாறு வாழ்ந்தால் வாழ்க்கை வளமுறும் என்று தெள்ளிய முறையில் கூறிய பெருமை பாரதியாரையே சார்ந்ததாகும்.

அடிமை வாழ்வினை அகற்ற அரும்பாடுபட்ட அமரகவி பாரதியாரின் எண்ணிய எண்ணம் திண்மையுடையதாக்கப்பட்டு சுதந்திர உரிமை பெற்ற நாம் அவர் கொள்கையினைப் பின்பற்றி அதன் வழி நடப்பதே பாரதியாருக்குச் செய்யும் கைம்மாறாகும். வாழ்க பாரதியின் நாமம்.



# நம் வீடு.

[வித்துவான். T. அடிகளாசிரியர்]
விரிவுரையாளர், புலவர் கல்லூரி, கரந்தை.



நாம் நாட்டையும், நகரத்தையும் சுற்றிப் பார்ப்போம். பல மக்கள் வீட்டில் வாழ்கின்றனர். வேறு பல மக்கள் சத்திரம் சாவடிகளிலும், தெருவோரங்களிலும், மரங்களின் அடியிலும் தங்கியிருந்து காலத்தைக் கடத்துகின்றனர். இவர் வீட்டு வாழ்க்கையினையே இன்னதென அறியாதவர். காட்டுள் வாழ் விலங்குகளினும் கடைப்பட்டவர். இவரிடம் உரிமையும் உடைமையும் இல்லை. அடிமையும் வலிமையுமே உள்ளன.

நிற்க, வீட்டில் வாழ்கின்றவரில் பலர் சொந்த வீடென்பதே அறியார்; தலைமுறை தலைமுறையாகக் குடிக்கூலி கொடுத்து வாடகை வீட்டிலேயே காலங்கடத்துகின்றனர். ஏதோ நல்வினை வயத்தால் சொந்த வீட்டில் குடியிருக்கும் பேற்றைப் பெற்றவர் இவ்வுலகத்திலே சிலர்தாம் உள்ளனர்.

### வீடென்றால் என்ன?

உலகப் பற்றை விட்டது வீடென்பர் துறவிகள். அவ்வீடு மறுமையில் பெறும் வீடாகும். அங்ஙனமின்றி வெளியுலகத்திலிருந்து விடுதலை பெற்றுத் தனித்திருப்பதற் குதவுவதே இம்மை வீடாகும்.

அல்லும் பகலும் உலகத்தாருடன் கூடித் தொழில் முதலானவற்றை இயற்றுகின்ற நாம் அத்தொழின் முயற்சியினின்றும் நீங்கி, நீராடி, உண்டு, உறங்கி இளைப்பாறுதற்காக உலகத்திலிருந்து விடுதலைபெற வேண்டாமா? அங்ஙனம் விடுதலை பெற்றுத் தங்கியிருக்கும் இடந்தான் மேற்கூறிய இம்மை வீடாகும். அவ்வீடு நமக்கு வெய்யில், மழை, பனி, காற்று முதலியவைகளால் துன்பம் நேராமலிருப்பதற்கு உதவுவதோடல்லாமல் நம் உடைமைகளைப் பாதுகாத்து வைப்பதற்குரிய இட

மாகவும் உள்ளது. இவ்வீட்டை நம் நிலைமைக்குத் தக்கபடி சிறிதாகவும், பெரிதாகவும் கட்டிக்கொள்ளுகிறோம்.

## தகுதியான வீடு :

சிலர் பெரிய வீடு கட்டி நாள்தோறும் பெருக்கவும், மெழுகவும் முடியாமலும், பழுதடைந்தால் பழுதுபார்க்க முடியாமலும் துன்பப்படுகின்றனர். ஆகையால் பெரிய வீட்டைக்காட்டிலும் சிறிய வீடே சிறந்ததென்னுங் கருத்தில் 'இடம்பட வீடெடேல்' என்று கூறினள் நம் ஔவை மூதாட்டி. நான் ஒருமுறை குடிசையில் வாழும் குறவன் ஒருவனிடம் பேசிக்கொண்டிருந்தபொழுது அவனை நோக்கி 'நீங்களெல்லாம் சிறு குடிசையில் குடும்பத்தோடு வசிக்கின்றீர்களே மனைவியுடன் கூட்டுறவு எப்படி நடத்துவீர்கள்!" என்று வேடிக்கையாகக் கேட்டேன்; அதற்கு அவன் கூறியதாவது "நாங்களெல்லாம் நல்ல உழைப்பாளிகள் இரவில் சோற்றை உண்டு படுத்தவுடனே மெய்மறந்து தூங்கிவிடுவோம்; காம வுணர்ச்சியுடைய கணவனும் மனைவியும் மட்டும் விழித்திருந்து கூடிக்கொள்வார்கள் சிறு குடிசையில் ஓரேயிடத்தில் எங்கள் குடும்பம் படுத்திருப்பதால் வேறு மனிதன் கள்ள நட்பிற்காக நுழைதல் முடியாது; நீங்களெல்லாம் பெரிய வீடு கட்டிக்கொண்டிருக்கிறீர்கள்: அங்கே ஆளுக்கொரு மூலையில் படுத்து உறங்கிக்கொண்டிருப்பீர்கள்; ஆதலால் வேறொருவன் வந்து உங்கள் பெண்களுடன் கள்ள நட்புச் செய்வதற்கு அவ்வீடு தகுதியாயிருக்கும்." என்று கூறினன். இதைக் கேட்டவுடன்

> "இரவுக் குறியே இல்லத்துள்ளும்
> மனையோர் கிளவி கேட்கும் வழியதுவே
> மனையகம் புகாக் காலை யான"

என்ற தொல்காப்பிய நூற்பா நினைவிற்கு வந்தது; யான் அதை நினைத்துக் கொண்டே அக்குறவனை நோக்கி "நீங்கள் உழைப்பால் மெய்மறந்து தூங்கும்பொழுது கள்ளக் காதலன் வந்தால் என்ன செய்வீர்கள்" என்று சொல்லி நகையாடினேன்.

அமைதியோடு இன்பமாய் வாழ்வதற்குரிய வீட்டைச் சிலர் தக்க விடத்தில் அமைத்துக்கொள்ளாமல் துன்பமடைகின்றனர். ஊர்ப்பொதுவிடங்களை அடுத்தும், சேறு நிறைந்த குட்டைகளின் அண்மையிலும், பலர் வந்து மலசலம் கழிக்குமிடத்திற்கு அருகிலும் தங்கள் வீட்டைக் கட்டிக்கொள்ளுகின்றனர்; இத்தகைய இடத்தில் கட்டப்பெறும் வீட்டில் குடியிருந்தால் தங்களுக்கு நோய் விளையும் என்று அம்மக்கள் சிறிதும் எண்ணிப் பார்ப்பதில்லை.

சிலருடைய வீட்டில் சாக்கடை நாற்றம் வீசும்; மலசலத்தை வீட்டுள்ளும் வீட்டிற்கு அண்மையிலும் கழித்துக்கொள்வதால் அவற்றின் நாற்றமும் வீசும்; வீட்டின் தரை ஈரமுள்ளதாயிருக்கும்; பகற்காலத்தில் ஈக்கள் மொய்த்தும் இராக்காலத்தில் கொசுக்கள் முற்றுகையிட்டுக் கடித்தும் துன்புறுத்தும். வீட்டில் சந்தும் பொந்தும் மிகுதியாயிருப்பதால் எலி பெருச்சாளி முதலியன வாழ்ந்து வாழ்க்கைக்கு வேண்டிய பொருள்களை அழித்துக்கொண்டே யிருக்கும்; இத்தகைய வீடுகளில் வாழ்பவர்க்கு அமைதியும் இன்பமும் எங்கிருந்து கிடைக்கும்?

“ சுற்றிலுஞ் சேற்றுக் குட்டைச் சொல்லரு மலக்காடாகும்
பற்றிய பன்றி யுண்டு பழகிய குட்டை வாழும்
மற்றையவ் விடத்தி லொப்பி மனைகட்டி வாழும் மாந்தர்
உற்றிடும் விலங்கா மென்றே வுரைப்பகல் லறிவின்
மிக்கார் ”

சாக்கடை நாறும் வீடுஞ் சலமலநாறும் வீடும்
ஈக்கடாம் பகலின் மொய்க்க இரவினிற் கொசுக்கள் கவ்வ
தாக்கிடு மீரஞ் சேர்ந்தே தழைத்திடு மெலிகள் வாழ்ந்தே
தேக்கிடும் வீடும் வீடோ தெளிவதற் கரிய காடே ”

மருத்துவரிற் சிறந்த தேரையர் ‘முற்றிலும் கருங்கல்லாற் செய்த வீட்டில் குடியிருப்பின் சூரிய வெப்பமும் காற்றும் இல்லாமையால் அழகும் ஆற்றலும் பசியும் நீங்கப் பித்தமும் மனத்துன்பமும் சிலேத்தும நோயும் உண்டாகுமென்றும்; மேல் மாடி வீட்டில் குடியிருப்பின் நில வெப்பத்தோடு பல

வெட்டை நோயும் நீங்க மிகுந்த அழகுண்டாகுமென்றும்; ஓட்டின் வீட்டிற் குடியிருப்பின் உயர்வா மென்றாலும் மழை பனி முதலானவற்றின் தாக்குதல் விளையுமென்றும்; மழை பனி வெய்யில்களின் தாக்குதல் இல்லாமையால் புல் வேய்ந்த நல் வீடே தக்கதென்றும் புகன்றுள்ளார்.

அலங்கா ரமுமதமும் அக்கினியும் நீங்கும்
துலங்கா தவமும் துலங்கா – திலங்க
வரும்கலகப் பித்தும் மனத்துயர்வு நோயும்
கருங்கலகப் பித்தர்க்குக் காண்

ஆதவம் துலங்காது—சூரிய வெப்பம் இல்லாமையால்.
ஐ நோய்—சிலேத்தும நோய்.
கருங்கல் அகம்—கருங்கல் வீடு.

நீட்டையுறு மேல்வீடு நீணிலவெப் போடுபல
வேட்டை யொழிக்குங்காண் மிக்கெழிலால் - ஓட்டையுறு
கல்வீ டுயர்வெனினும் கால்இமம்சா ராநலத்தால்
புல்வீ டுயர்வாம் புகல்.

வேட்டை—வெட்டைநோய்.
கால் இமம்—காற்றும் பனியும்.

அறம் பொருள் இன்பம் என்ற மூன்றும் மக்கள் அடைய வேண்டிய இம்மைப் பயன்களாகும் என்று அறிஞர் கூறுகின்றனர். அத்தகைய சிறந்த பயன்களை மக்கள் இல்லிலிருந்து ஈட்டிக்கொள்ள வேண்டும். நல்ல இல்லில் நல்ல இல்லாளோடு கூடியிருந்து செய்வதல்லவா இல்லறமென்னும் நல்லறமாகும். இங்ஙனம் சிறந்த அறம் முதலியவற்றைச் செய்வதற்கு இடமாகிய வீட்டினை குடிக்கூலி கொடுத்துப் பெறாமல் உரிமையாகப் பெற்று வாழ்பவரையே மக்களுட் சிறந்தவரென்று அறிஞர் கருதுகின்றனர்.

பெருமையும் அறிவுஞ் சிறந்த தலைவனொருவன் குறிஞ்சி நிலத்தையடைந்தான். அழகும் அன்புஞ் சிறந்த நங்கையொருத்தி தன்னந்தனியாய் ஆண்டு எதிர்ப்பட்டாள். நல்வினை வயத்தால் இருவருடைய கண்ணும் மனமும் ஒன்ற இருவரும் கூடினர். அக்கூட்டத்தால் மகிழ்ந்த தலைவன் கூறியதாக

" தம்மில் இருந்து தமதுபாத் துண்டற்றால்
அம்மா அரிவை முயக்கு"

என்னுங் குறளை நமது தெய்வப் புலமைத் திருவள்ளுவர் கூறிச் சென்றுள்ளார்.

ஆனால் அக்குறள் வெண்பா
'தன்னில் லிருந்து தனதுபாத் துண்டற்றால்
அம்மா அரிவை முயக்கு'

என்று ஒருமைச்சொல் தோன்ற இயற்றப்பெறவில்லை. 'தம்மில் லிருந்து தமதுபாத் துண்டற்றால்' என்று பன்மைச்சொல் தோன்ற இயற்றப்பெற்றுள்ளது. இக்கருத்தை முதலில் நன்கு நினைவில் வைத்துக்கொண்டே நாம் இக்குறளுக்கு உரைகாணத் தொடங்கவேண்டும். "இக்களவுக்காலத்தில் அரிவையும் யானு மாகிய இருவேமும் மனமொத்துக் கூடிய முயக்கம் எங்ஙனமிருந் ததென்றால்? கற்பாகிய கைகோள் நிகழுங் காலத்தில் ஒரு காத லனும் காதலியுமாகிய இருவரும் தங்களுக்குச் சொந்தமாகிய வீட்டிலிருந்து, இருவரின் முயற்சியால் தேடித் தமதாக்கியப் பொருளை, இருவரும் மனமொத்து பிறருக்குத் தந்துதவி, எஞ் சியதை இருவரும் உண்டால் எவ்வளவு இன்பமாயிருக்குமோ அவ்வளவு இன்பமாயிருந்தது என்ன வியப்பு!" என்பது இக் குறளின் பிண்டப் பொழிப்பாம்.

## உவமை நலம்.

இக்குறளில் திருவள்ளுவர் கூறிய உவமை நலம் நாம் அறிந்து மகிழ்தற்குரியது. தம் வீட்டிலிருந்து பிறருடைய பொருளைப் பெற்று பிறர்க்கீந்து உண்டு வாழ்ந்தாலும் இனிமை யில்லை. அல்லது பிறர் வீட்டிலிருந்து தாம் ஈட்டிய பொருளைப் பிறர்க்கீந்து உண்டு வாழ்ந்தாலும் இனிமையில்லை. அல்லது தம் வீட்டிலிருந்து தம் முயற்சியாற் பொருளை யீட்டிப் பிறர்க்கீயாது தாமே உண்டாலும் இனிமையில்லை. தம் வீட்டில் இருக்க வேண்டும், தம் தாளாண்மையாற் பொருளை ஈட்டவேண்டும், பிறர்க்கு ஈயவேண்டும், அதன்பின் தாம் உண்ணவேண்டும்; அங் ஙனம் உண்பதே சிறந்த இன்பமாம். அச்சிறந்த இன்பம்போன் றுள்ளது எங்கள் காதலின்பம் என்று கூறினான் காதலன்.

சோற்றுக்கடையில் போய் உண்பதும், பிறர் வீட்டில் உண்பதும், தன்னந் தனியாய் உண்பதும் ஆகிய இன்னோரன்னவெல்லாம் இன்பமென்றிருப்பாரைப் பார்த்து நம் திருவள்ளுவர் தம் வீட்டில் தம் முயற்சியாற் பொருளைத் தேடிப் பிறருக்குப் பகுத்தளித்து எஞ்சியதைத் தாம் உண்டலே இன்பம் பயக்கும் என்று இடித்துக் கூறுகிறார்.

இவற்றில் தமக்காக இல்லைப் பெறுதலும், பொருளைப் பெறுதலும் உடைமை என்னும் மெய்ப்பாடாகும்; பிறருக்கீதல் கொடையெனப்பட்டுப் பெருமிதம் என்னும் மெய்ப்பாடாகும்; தாம் உண்டல் செல்வமெனப்பட்டு உவகை என்னும் மெய்ப்பாடாகும்.

கற்பு நெறியால் மணம் செய்துகொண்டு உடைமை, ஆண்மை, பெருமிதம், செல்வம் முதலிய சிறந்த மெய்ப்பாடுகள் தோன்ற இல்லறம் நடாத்தும் தலைவன் தலைவியர் அடையும் இன்பம் போலவே யாங்கள் களவில் துய்க்கப்பெறும் இன்பமும் இருக்கின்றதென்று புணர்ச்சி மகிழ்ந்த தலைவன் கூறினன்,

இன்பமும் பொருளும் அறனும் அன்பொடு புணர்ந்த ஐந்திணைக் காமத்துட் சிறந்த களவுப் புணர்ச்சிக்குத் 'தம்மில் இருந்து தமது பாத்துண்டல்' உவமையாக அமையுமேயானால் தமக்கென்று வீடு கட்டிக்கொண்டு அவ்வீட்டில் உரிமையாக வாழ்தல் எத்துணைச் சிறந்ததென்று நம் மக்கள் எண்ணிப் பார்க்கவேண்டாமா?

இதுபற்றி முல்லைக் கலியுள் வரும் செய்தியொன்று நாம் படித்து இன்புறத்தக்கது. முல்லை நிலத்துத் தலைவனொருவன் ஓர் தலைவியைக் களவால் கூடினன். அத்தலைவன் அவளை விரைவில் மணந்துகொள்ள முயலாமல் அக்களவுப் புணச்சியிலேயே நாட்டமாயிருந்தான். ஓர்நாள் அத்தலைவி சிற்றிலிழைத்து விளையாட முயன்றுகொண்டிருந்தாள். அங்கு வந்துசேர்ந்த தலைவன் சூழ்ந்த அணிகலன்களையும் அழகினையும் இளமையினையுமுடைய நல்லாய்! நீ செய்து விளையாடும் சிற்றிலை யானும் சிறிது செய்து தரட்டுமா? என்று வினவினன். அதற்கு அவள் கூறுகிறாள்.

# வடக்கிருந்த குடக்கோன்.

வித்துவான். க. ப. கண்ணன்

(நிலைமண்டில ஆசிரியப்பா.)

## வெண்ணிப் போர்க்களம்.

எங்கும் பரந்தது செங்குருதி வெள்ளம்
பொங்கும் சினத்தால் போரிட மறவர்
வெட்டுண் டுருளும் வீரரின் தலைகள்
பட்டிறந் தோரின் பருவுடல் கூட்டம்
5 திடரென உயரும் குடரின் குவியல்
பிளிற்றி வீழும் களிற்றின் கும்பல்
அரசக் குடைகள் கொடிகள் அலைத்து
உரசிச் செல்லும் ஒண்குரு திக்கடல்!
கருந்தலைக் கண்கள் கயிறும் குடர்கள்

---

56-ம் பக்கத் தொடர்ச்சி]

ஏ தோழனே! நீ என்னை அடைந்ததாகக் கருதிக்கொண்டு பிறர் கட்டிய வீட்டிலே இருக்கின்றாய்! நீ எந்தெந்த நூல்களையோ பாவம் வருந்திக் கற்றுள்ளாய்! அங்ஙனம் கற்றிருந்தும், உரிமையான வீடொன்றைக் கட்டிக்கொண்டு அவ்வீட்டிலே என்னை வைத்து வாழ்க்கை நடத்தும் கல்வியை மட்டும் நிச்சயமாய்ச் சிறிதும் நீ கற்றுக்கொள்ளவில்லையே! நீ இக்கல்வியைக் கற்றுக்கொள்ளாமலிருந்ததற்கு நான் பெரிதும் வருந்துகின்றேன் என்று கூறினாள்.

### முடிப்புரை.

இவைகளிலிருந்து உரிமையான வீட்டில் வாழ்வதே உயர்ந்த இன்பமென்றும், அதற்குரிய முயற்சியைச் செய்வதே ஆடவரின் கடமையென்றும் அறிந்துகொள்ளுகின்றோம். உரிமையடைந்த இந்திய நாட்டிலே எல்லா மக்களும் ஒவ்வொரு வீட்டைப் பெற்று இன்பமடைந்து வாழும் முயற்சிக்கு நம் அரசியல் உதவிசெய்து துணைபுரிய வேண்டுமென்பதை அரசியலார் நன்கு அறிந்துகொள்ள வேண்டுமென்பதே எனது எண்ணமாகும்.

10 விருந்தாய் அருந்த வீழும் பருந்துகள்!
ஆ! என் றரற்றும் அழுகை ஒலியும்
ஓ! என் றோலம் இடுவோர் ஓதையும்
அந்தோ! என்பார் அவல ஒலியும்
அஃ்ஃஅஃ்ஃ என்றே நக்கமர் செய்யும்
15 மிக்கோர் ஒலிக்கும் மிடல்சேர் ஒலியும்
பக்கம் எட்டும் தொக்கி ஒலிக்க
எண்ணில் மறவர் பிணத்தின் காடு
கண்ணிற் கூற்றுக் காணச் சிறந்தது
வெண்ணி யென்னும் பெரும்போர்க், களமே!

### கரிகாலன் போர்க்களம் புகுதல்.

20 நின்றான் கரிகால் வளவன் ஓர்சிறை
குன்றா மறஞ்சேர் பொன்றாப் புகழோன்!
வெம்போர் திளைக்கும் தம்படை வீரர்
செம்பா திக்குமேல் செகுத்திறக் கண்டான்
செருக்கும் மானமும் சேர்ந்துளம் எழும்ப
25 திருக்கிளர் மார்பன் செருக்களம் சேர்ந்தான்.

### பெருஞ்சேரலாதன் போர்க்களம் வருதல்.

வருதி! வருதி! வன்கண் மறவீர்!
பொருதி! பொருதி! பொன்றிடப் பகைஞர்
தருதி! தகைசால் வெற்றித் தருதி!
என்றே தன்படை வீரர்க் கூக்கம்
30 நன்றாய் ஊட்டி நடத்திமுன் னேறி
குன்றென வருபெரும் சேர லாதனைக்
கண்டான் களித்தான் கரிகால் வளவன்
களிற்றைக் கண்டுளங் களிக்குஞ் சிங்கக்
குருளையை ஒப்பக் குதிகொள் நெஞ்சான்

### இருபடையும் மோதல்.

35 நெருங்கும் இருவர் படையும் மலைகள்
நொறுங்கு மோவெனப் பிறங்கொலி செய்தே
அருந்திற லொடுபெரும் அமர்செய லுற்றன!

## சோழனும் சேரனும் பொருதல்.

சேரனும் சோழனும் சேரநேர் எதிர்ந்தனர்
சினத்தீப் பொறிகளைச் செவ்விழி சிந்தின
40 மனத்தில் மகிழ்ச்சி மலிந்திடப் போரைக்
குறித்துத் தடந்தோள் பெருத்து விம்மின
மீசை துடித்தன வெண்பல் நொடித்தன
ஓசை எழஇரு ஒள்வாள் மலைந்தன
நீண்ட நேரம் நீள்வாள் போர்செய
45 பூண்டன முகமும் மார்பும் விழுப்புண்
ஒடிந்தன வாள்கள் மடிந்தனர் அல்லர்
ஒழுகும் குருதி உடம்பில் படர
கொழுகூர் வேலினைக் கொண்டனர் கையில்
எரிந்தனர் வாங்கினர் இடம்வலம் மாறிப்
50 புரிந்தனர் வேற்போர் பெருந்திறல் காட்டி
சிறந்தனர் இருவர் ஒருவர்க் கொருவர்
எனஇரு படைசேர் வீரர் தம்போர்
நிறுத்தி விட்டே உரைப்பா ராயினர்.

## பெருஞ்சேரலாதன் பீடழிதல்.

இறுதியில் சோழன் எறிந்த கூர்வேல்
55 மறுவுற சேரன் மார்பில் தைத்து
நிலைக்கா மல்உள் துளைத்தே முதுகின்
புறத்தே புண்செய் துறப்போய் விடவே
மறப்போர் மன்னன் மனமிகக் கலங்கி
உறத்தலை கீழே உள்ளுநவா னானன்

## சேரலாதன் வடக்கிருத்தல்.

60 "என்குல முன்னோர் எவரும் என்போல்
பின்புறம் புண்ணைப் பெற்றனர் இலரே!
விழுப்புண் அன்றிப் புறப்புண் பெறுமோர்
வழுப்புண் படஎன் குலத்தார் வாழார்!
தமிழ்மூ வேந்தர் தழைத்த மரபினில்

65 கமழ்ஒரு மறவனும் கைபிழை செய்தும்
முதுகினைக் காட்டி ஓடுவார் மேலே
மதுகை யின்றிப் படைவிட அறியான்!
சோழனும் மார்பைப் போழவே கூர்வேல்
எறிந்தான் பிழையினைப் புரிந்தான் அல்லன்
70 போர்பெரு வேந்தன் சீரதே செய்தான்!
ஆறு குற்றம் யானே செய்தேன்!
நாணம் சிறிதும் பேணு தொழிந்தேன்
வந்த வேலினை வாங்கி முன் நிறுத்தும்
மைந்தினை என்பெறு மார்பு பெற்றிலை!
75 உள்ளு டுருவி வெள்வேல் போக
எள்ளும் புறப்புண் ஏற்றதென் செய்வேன்?
இவ்வுடல் சுமந்திவண் இருந்துயிர் வாழ்தல்
கவ்வை எனக்கும் களங்கமென் குடிக்கும்
அவ்வசை துடைக்க செவ்விய என்னுயிர்
80 விடுவதே நல்லிசை நடுவது ஆமெ"ன

## கும்மி

வேறு சந்தம்.

வாளொடு தானும் வடக்கிருந் தான்உயிர்
வாட இகழ்உட லைஇழந்து
கேளொடு மன்னர் புலவர் களும்புகழ்
கேட்க வும்பாட வுமேசிறந் தான்.

---




**வித்துவான் ந. இராமநாதன்,**
(கரந்தைப் புலவர் கல்லூரித் தலைவர்.)

---

## தோற்றுவாய்.

கல்வி என்றதும் அதனைக் களிப்புடன் வரவேற்க வேண்டும் என்னும் எண்ணம் எல்லோருக்கும் தோற்றும். வரவேற்பது மட்டுமல்ல அதனை வாழ்த்தவும் வணங்கவும் கூடத்தோன்றும். ஆனால் கல்வியினைப் பயிலவேண்டுமென்றால் பலருக்குச் சோர்வும், மலைவும் ஏற்படுவதைக் காணுகின்றோம். இளைஞரிடத்தும் இதனைக் காணுகின்றோம். ஆனால் மனித வாழ்வின் முன்னேற்றம் அதனிடத்தேதான் இருக்கின்றது. இந்த சோர்வு மனப்பான்மை பல ஆண்டுகளாக மக்கள் மனத்துப் பதிந்துவிட்டது.

எடுத்துக்காட்டாக ஒன்று பார்ப்போம். கல்விக்கூடம் தொடங்கும் காலை நேரம், அதனை அறிவிக்கும் மணியும் அடிக்கப்படுகிறது. கடவுள் வணக்கம் முடிந்ததும், மாணவர்கள் தத்தம் வகுப்பறைகட்குச் செல்லுகின்றனர். இப்பொழுது இவர்களின் மனநிலை ஒரு மாதிரியாக இருக்கின்றது. மாலையில் கல்விக்கூடம் முடிகின்றது. அதனை அறிவிக்கும் மணியொலியும் கேட்கின்றது. மாணவர்கள் வெளியிற் செல்லுகின்றனர், இந்நிலையில் இவர்களின் மனநிலை முழுதும் வேறுபட்டுக் காணப்படுகிறது. வகுப்பறைக்குச் செல்லும் மாணவர், ஏதோ தவிர்க்க முடியாத பெரிய இடரில் வலிய அகப்பட்டுக் கொள்ள அறிந்து செல்லுபவர்போலக் காணப்படுகின்றனர். வெளியிற் செல்லுவோர், வேட்டுவனின் குறிக்குத் தவறிப் பறந்துசெல்லும் புறாவைப் போலப் பறக்கின்றனர். இந்த மனப்பான்மை சிலருக்கு இல்லாமலிருக்கலாம். ஆனால் பலருக்கு இதே மனப்பான்மைதானுண்டு. இந்த மனநிலையை வளர்த்துக் கொண்டதால் பலர் கல்வி பயில ஊக்கங்கொள்வதில்லை. நல்ல

வாய்ப்பிருந்தும் கல்வி பயிலாமல் விட்டோர் கணக்கிலர். படித்தவருள்ளும் அரைகுறையாகப் படித்துவிட்டு அரசியல் ஊழியம் செய்வோரும், வேறு தொழில் செய்வோருமாகவுள்ளனர். இவர்களுள்ளும் பலர் வாழ்நாள் முழுவதும் வயிற்றைக் கழுவுவோரும் எத்தகைய கொடுமை செய்தாவது செல்வத்தைக் குவித்துச் செருக்கோடு வாழ்வோருமாகின்றனர். இவையெல்லாம் கல்வியுடையவர் என்பதைக் காட்டும் அடையாளங்களல்ல. மாறாகக் கல்வியில் வெறுப்புடையவர்களாகவே காணப்படுகின்றார்கள். படித்தவர் பலர் இங்ஙனமே வாழ்வதால் நாடு நலமுறவில்லை. உரிமைபெற்ற நம் நாட்டிற்கு இம்மனப்பான்மை தகுமா? தகாது.

எழுமையும் ஏமாப்புடைத்தான கல்வியைப் பயில இவ்வளவு வெறுப்பா? மனித இனத்தின் வரண்ட வாழ்வை வளமுறச் செய்யும் கல்வி ஓடையில் கலந்தாடத் தயக்கமேன்? கண்ணைக் கண்ணாக்கிக் காணாதவற்றையும் காணக்காட்டும் கல்வி ஒளியைக் காணாது கண் மூடுவதா? அறியாமை அகல அறிவொளி வீசும் கல்வியாம் பனிமதியின் ஒளிகண்டு பதுங்குவதா? அடிமையும் மிடிமையும் அகலவும், போரும் பூசலும் ஒழியவும் புது வழி காட்டும் அந்தக் கல்வியைப் புறக்கணிப்பதா? மனிதனை மனிதனாக்கி, அம்மனிதனின் உயிர்க்கு மன்னிய துணையாயுள்ள கல்வியை மறப்பதா? மனிதனின் கொடுக்கக் குறையாச் செல்வமாய் எய்ப்பில் வைப்பாம் கல்வியைக் கல்லாது வாளா இருப்பதா? பழுமரம் நாடும் பறவைபோலக் கல்விக்கூடம் நாடிச் செல்ல வேண்டாமா? ஆம், செல்லத்தான் வேண்டும். கல்லாது போகிய நாள் உளவாகாமல் கல்வியைப் பயில வேண்டாமா? ஆம்! பயிலத்தான் வேண்டும். ஆனால், நம் மனப்பான்மை மாறாக இருக்கின்றதே! என் செய்வது?

இளைஞராயினும், முதியராயினும் கல்வி பயிலாமல் ஊக்கமிழப்பதற்குப் பல காரணங்களுண்டு, அவற்றுள் தலையாயவை மூன்று. முதலாவதாகக் கல்வியைப் பற்றிய பொதுவான விளக்கம் மாணவர்கட்குத் தெரிவதில்லை. மேலும் கல்வியை அடையும் வழிகளையும் சரிவரப் புரிந்துகொள்வதில்லை. மூன்றாவதாகக் கல்வியின் நோக்கங்களாய பயன்களும் புலனாவதில்லை.

இந்த மூன்று செய்திகளையும் மாணவர்கட்குப் புரியுமாறு செய்தால், கல்வியை வேலும் மேலும் பயில ஊக்கமுண்டாகும். இலக்கியங்களோ இலக்கணங்களோ, அறிவியற் கலைகளோ, நிலநூற்கலைகளோ விலங்கியற் கலைகளோ, படைக் கலைகளோ இன்னும் எத்துறைக் கலைகளாயினும் மாணவர்கள் சிந்தித்து முடிவு காணும் வன்மையைக் கொடுக்கும். வாழ்நாள் முழுவதும் தன்னலமே பேணித் திரியும் பேய்களாக இல்லாமல் இருக்க உதவும். வாழ்வாங்கு வாழும் நெறியே கல்வியின் பயனெனக் கருதத் தூண்டுகோலாகும். இந்நோக்கங்கட்காகவே இது எழுதப் படுகின்றது.

## கல்வி

கல்வி என்பது கற்றலெனப் பொருள்படும் சொல்லாகும். இச்சொல்லிற்கு அடியாக, அல்லது முதலாக நிற்பது "கல்" என்பதாகும். இதற்குத் தோண்டுதல் அதாவது ஆய்தல் என்ற பொருள் உண்டு. ஆய்தல் என்றால் எதனை ஆய்வது? மனித வாழ்வை ஆய்வது அல்லது மனித வாழ்வுக்கு வேண்டியவைகளை ஆய்வது என்பது அதனுடைய முழு விளக்கமாகும். அப்படி ஆய்ந்துகண்ட முடிவுகள் பல. துறைதோறும் அம்முடிவுகள் விரிந்துகிடக்கின்றன. ஆகவே கல்வி என்பது இவ்வுலகில் வாழ்ந்து சென்ற அறிஞர்களின் அநுபவ முடிபுகளாகும். இப்பொழுது வாழ்ந்துகொண்டிருக்கின்ற அறிஞர் காணும் அநுபவ முடிபுகளும் கல்வியேயாகும்.

மனித வாழ்வை அறிஞர் ஆராய்ந்த பல ஆண்டுகளின் அநுபவம்தான் எண்ணற்ற இலக்கியங்களை உண்டாக்கியது. வாழ்வில் கண்கூடாகக் காண முடியாத கற்பனை இலக்கியங்களுமுண்டே! ஆகவே இங்ஙனம் கூறல் பொருந்துமோ? என்று வினவின், பொருந்தும் என்று கூறலாம். கற்பனைச் செய்திகட்கும் கண்கூடான வாழ்வின் அநுபவங்கள்தான் முதல் என்பது எண்ணிப் பார்ப்பின் புலனாகும். இவ்விலக்கியங்களையும், உலக வழக்கையும் கொண்டே எண்ணற்ற இலக்கணங்கள் தோன்றின. இவ்விடத்து இலக்கணத்தைப்பற்றிச் சில கூற வேண்டியிருக்கின்றது. ஏனென்றால், இலக்கணம் என்பது

மொழியைக் கட்டுப்படுத்தும் விலங்குபோன்றதென்றும், அது தேவையில்லை என்றும் சிலர் கூறுகின்றனர். இவர் கூற்றினை ஆய்வோம்.

இலக்கணம் என்பது மொழிக்கு இலக்காகப் பொருந்தி இயங்குவது என்பது பொருள். ஒரு மொழியின் இயல்பான பலவகை அடையாளங்களை விளக்குவதே இலக்கணமாகும். பேச்சு வழக்கையும், நூல் வழக்கையும் ஆய்ந்துதான் ஒரு மொழியின் இயல்பை விவரிக்க முடியும். ஆய்வதற்கு முன்னர் விரித்துரைக்க இயலாது. "பன்னீருயிரும் மொழி முதலாகும்" என்று தொல்காப்பியர் கூறியுள்ளார். இவர் கூறியதனால்தான் பன்னிரண்டு உயிரெழுத்துக்களும் மொழிக்கு முதலாக வருகின்றன என்பது இல்லை. மற்றென்னவென்றால் பன்னிரண்டு உயிரெழுத்துக்களும் தமிழில் மொழிக்கு முதலில் வருகின்றன; அங்ஙனம் வருகின்றவற்றைக்கண்டுதான் இவ்வாறு கூறினரென்பது கருத்தாகும். இதனால் ஒரு மொழியின் இலக்கணம் பிந்தியதென்பதும், பேச்சு வழக்கும், நூல் வழக்குமாய மொழிகள் முந்தியவென்பதும் விளக்கப்பட்டன. இக்கருத்தினையே,

> "வழக்கும் செய்யுளு மாயிரு முதலின்
> செந்தமி ழியற்கை சிவணிய நிலத்தொடு
> முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணிப்
> புலந்தொகுத்தோன்"

எனத் தொல்காப்பியப் பாயிரமும் விளக்குதல் காண்க. ஆகவே மொழியின் இயல்பைக் கண்டு கூறிய இலக்கணம் மொழியைக் கட்டுப்படுத்தல் யாங்ஙனம்? பேச்சு வழக்கினும், நூல் வழக்கினும் உள்ள மொழிகளில் முன்னிருந்தவாறே இல்லாமல் சில மாற்றங்கள் ஏற்படுவது இயல்பாகும். அங்ஙனம் நிகழும் மாற்றங்களில் பொருந்துவனவற்றை இலக்கண நூற்கள் வழக்கொழிந்த பழையவற்றை "இறந்தது விலக்கல்" என்பதனால் விலக்கியும், புதியனவாயுள்ளவற்றை "எதிரது போற்ற" லென்பதனால் தழுவியும் வந்துள்ளன. நன்னூலார் கூறிய பாகாப்பதம், பகுபதம் ஆய தனி மொழிகளின் இலக்கணம் இன்றும்

வழக்கில் பயிலப்பட்டு வருகின்றது. ஆனால் முன்னை நூற்களில் இம்முறை கிடையாது. வட நூன் முறையைத் தழுவி இவ் வாறு பகுத்துரைத்தார். இதனால் யாரும் விலக்கிவிடவில்லை. ஆகவே இலக்கணம் ஏற்புடைய மாற்றங்கட்கு இடந்தரும் இயல்பினதென்பது பெறப்படும். மேலும் "பழையன கழி தலும் புதியன புகுதலும் வழுவலகால வகையினனே" என் னும் நன்னூல் நூற்பாவும் இதனை நன்கு விளக்கும். இந்நூற் பாவில் ஆசிரியர் "கழிதலும்" "புகுதலும்" எனத் தன் வினை யிட்டு உரைத்திருக்கும் நயம் காண்க. ஆனால் சில முற்போக்கின ராகக் கருதிக்கொள்ளும் அன்பர்கள் கழிதலைக் கழித்தும், புகு தலைப் புகுத்தியும் ஆக்கிவிடப் பார்க்கின்றனர். அவர்களின் முற்போக்கான எண்ணத்தையும் ஆர்வத்தையும் மெச்சவேண் டியதுதான். ஆனால் மொழியின் இயல்புக்கு முரணாகும் என் பதைச் சிந்திப்பார்களாக.

மொழியின் பயன் ஒருவர் கருத்தை மற்றவர் உணர்ந்து கொள்வதேயாகும். ஒருவர் பொருளை உணர்ந்துகொள்வதற்கு இலக்கணம் நல்ல துணை செய்கின்றது. மொழியின் இயல்பு இலக்கணமாகவே, இலக்கணமுணர்ந்தோன், மொழியை முட் டின்றியுணரும் வன்மையுடையனாகின்றான். ஆகவே அம்மொழி யில் முன்னோர் எழுதியுள்ள நூற்களையோ, வாழ்கின்றவர் எழு தும் நூற்களையோ தெளிவாக உணர்ந்துகொள்ள முடிகின்றது. கருத்து விளக்கத்துக்கு இலக்கணம் பெரிதும் உதவும் என்பதை அநுபவவாயிலாகவும் நன்குணரலாம். ஆகவே மேற்கூறிய கார ணங்களால் இலக்கணம் என்பது ஓதுக்கத்தக்கதன்று என்பதை மாணவர்கள் நன்குணர்வார்களாக.

மனித வாழ்வுக்கு வேண்டியவைகளை ஆய்ந்ததின் பயன் தான் அறிவியற்கலைகளின் (Science) அளவிலாப் பெருக்க மாகும். நிலநூற்கலைகளும் (Geography) விலங்கியற்கலைக ளும் (Zoology) இன்னும் பிற கலைகளும் பெருகக் காரணமா யிருந்தது மனித வாழ்வின் தேவையேயாகும். ஆகவே, இஞ் ஞான்று கல்வித் துறையில் இவ்வளவு சிறப்பும், பெருமையும் ஏற்படுவதற்கு முதலாகவுள்ளவை மேற்கூறிய இரண்டுமே என வுணர்க. மனித வாழ்வு, மனித வாழ்வின் தேவை என்னும்

இரண்டன் அடிப்படையிலேதான் கல்வித் துறையின் எண்ணரிய கலைகள் யாவும் தோன்றியுள்ளன.

உலகில் நம்மொடு தோன்றியனவும், நமக்கு முன்னே தோன்றியனவுமாகிய உயிர்கள் மிகுதியாகவுண்டு. அவைக ளெல்லாம் தோன்றியகாலத்து உள்ள நிலைமையில் மாறுபாடே அடையாமல் உள்ளன. இங்கே குறிப்பிட்ட மாறுபாடென்பது, இயற்கையில் ஒன்றிலிருந்து ஒன்றாக மாறு (Evolution) படும் இயற்கை மாற்றத்தைக் குறிப்பிடவில்லை. அறிவை அடிப்படை யாகக்கொண்ட மாற்றத்தைக் காண முடியவில்லை என்பதாகும். சான்றாக மாட்டை எடுத்துக்கொள்வோம். நமக்குத் தெரியும் இப்போதுள்ள கண்கூடான நிலைமையாலும், நூலளவையாலும் பல நூற்றாண்டுகளாக மாற்றத்தைக் காணேம்.

ஆனால் மனித இனம் அப்படியல்லவே! தழைகளையும் தோலையும் ஒரு காலத்தில் ஆடையாகக் கொண்டவர்கள் ஆடை யில் எவ்வளவு முன்னேறியுள்ளனர். பட்டாலும் நூலாலும் பலவகை ஆடைகளைக்கண்டு உடுத்தி மகிழ்கின்றனர். எலி மயி ரினாலும் ஆடைகள் நெய்து அணிந்தனரெனச் சங்க நூற்களில் காணுகின்றோம். குகைகளில் வாழ்ந்த காலம் போய், அழகான எழுநிலை மாடங்களில் இயற்கையின் பருவ நிலையையும் வென்று விட்டுக் குடியிருக்கின்றனர். ஆகவே, மனிதன் தங்கும் வீட் டிலும் நாடொறும் பல மாற்றங்களைக் காணுகின்றோம். மனிதன் உண்ணும் உணவிலும் பலவகையான மாற்றங்களைக் காணுகின் றோம். இவ்வாறாக மனித வாழ்வில் மட்டும் எல்லாத் துறை களிலும் மாறுபட்டு வரும் நிலைமையினைக் காணுகின்றோம்.

கண்ணும் நெஞ்சும் கவருகின்ற கடலையும், விண்ணையும், மண்ணையும் கண்டு ஆதி மனிதர் கலங்கினர். வாவும் குதிரைக ளென வந்து பொரும் கடல் அலைகளைக் கண்டோர் கலங்கா திருக்கவும் முடியுமோ? பின்னர் என்ன ஆயிற்று? ஆண்டுக் கணக்காக மனிதன் அலைகளின் ஊடே மிதப்புக் கருவிகளின் உதவியால் அலைந்து ஆவனவற்றையெல்லாம் செய்துகொண் டான். இன்னும் சற்று மிகுதியாக எண்ணிப் பார்ப்பின், இயற்கையில் நிகழும் பலவகைச் சக்திகளையெல்லாம் தன் வச

திக்கு வேலைசெய்யுமாறு ஆக்கிவிட்டான். "நீரோடி நிலங் கிழிக்க நெடுங்குன்றிற் பிலஞ்சேரப் பாம்புக் கூட்டம் போராடும் பாழ் நிலத்தைப் புதுக்கினன். காடு கொன்று நாடாக்கினன். குளம் தோண்டி வளம் பெருக்கினன். இவைகளையெல்லாம் மனித இனம்மட்டும் எங்ஙனம் செய்யமுடிந்தது? இங்கேதான் சிந்தித்துப் பார்க்கவேண்டும். முன்னவர் வாழ்ந்து கண்ட அநுபவ முடிவுகளாகிய கல்வியைப் பின்னல் வாழ இருக்கின்றவர் அறிந்துகொள்ளும் வாய்ப்பினால்தான் இவ்வளவு முன்னேற்றங் களும் ஏற்பட்டன என்பதைத் தெள்ளிதினுணர்க.

உயிரற்ற பொருள்களைத் தன்னதாக்கிக் கொண்டதில் வியப் பில்லை. தன்னுடன் தோன்றிய உயிர்களோ அல்லது தன்னுடன் தோன்றாத உயிர்களோ, அவற்றையெல்லாம் தன் நன்மைக்குப் பயன்படுத்திக்கொண்டான். ஆடும் கிடாயும் வளர்கின்றனவே! அவைகள் மனிதனின் ஆவலை அடக்க என்று எண்ணமுடியுமோ? முருங்கையும், வெண்டையும், கத்தரியும் காய்ப்பது மனிதனின் பொருட்டா? பல்வகை மரங்களெல்லாம் பழுத்துத் தொங்கு வது மனிதனுக்கா? வண்ண மலர்கள் இன்மணம் பரப்பி நிற் பது எற்றுக்கு? இவையெல்லாம் அவ்வவ்வினங்களின் வளர்ச் சியைக் கருதியல்லவா? ஆனல் மனிதன் அவற்றையெல்லாம், கெடுத்தோ அல்லது கெடுக்காமலோ பயன்படுத்துகின்றான். மாடு வளர்வது மனிதனுக்கு உழவு உழ என்று எண்ண முடி யுமோ? அவைகளைப் பிடித்துக் கட்டிப் பழக்கி நல்ல பயனை அடைகின்றான். மாட்டை அடித்து வதைத்து அதன் உழைப் பையும் பாலையும் அடைந்து மகிழும் மனிதன் அந்த அளவில் நிற்கவில்லை. அதன் இயற்கை யழகைக் கெடுத்து அழகுபடுத்து கின்றான். இயற்கையாயமைந்த ஆண் தன்மையைக் கெடுத்து வன்மையூட்டுகின்றான். கொம்பில்லா மாட்டைப் பாருங்கள். அதனுடைய காதையும் கொம்பையும் அறுத்தும் தீய்த்தும் விடும் நிலைமையைக் காணுகின்றோம். சுருங்கச் சொன்னல் உலகம் உலகிலுள்ள உயிர்ப் பொருள்கள், யாவும் மனித இனத் துக்கே என்று சொல்லுமளவுக்கு மனிதன் ஆட்சி செய்கிறான்.

இது எங்ஙனம் முடிந்தது? மீண்டும் சிந்தியுங்கள். மற்றைய உயிரினங்கட்கில்லாத ஒன்றை மனிதன் அடைந்துள்ளான். அது என்ன? அதுதான் முன்னர் வாழ்ந்து கண்ட அநுபவங்களைப் பின்னர் அறிந்துகொள்ளும்படியான கல்வியாகும். எண்பது ஆண்டுகள் வாழ்ந்த பெரியவர்களின் அநுபவ முடிவுகளைப் பின்னால் வாழ இருக்கும் இளைஞர்கள் சில நாட்களில் அறிந்துகொள்ள முடியும். இப்படியாக மனித இனம் எவ்வளவு ஆண்டுகள் வாழ்ந்துள்ளதோ, அவ்வளவு அனுபவங்களும் பின்னுள்ளவருக்குப் பயன்பட்டு வருகின்றன. ஆதி மனிதன் வாயால் அறிவுறுத்தியிருப்பான். பல ஆண்டுகட்குப் பின்னர் எழுதிவைக்கும் பழக்கமுண்டாகியிருக்கலாம். இப்போது அச்சிடும் பழக்கமும் வந்துவிட்டது. இன்னும் மனிதன் இவ்வுலகில் வாழ வாழ அவனுடைய அனுபவ எண்ணங்களும் அதன் பயனாகச் சொற்களும், அதன் பயனாகச் செயல்களும் பெருகிக்கொண்டுதான் போகும். இதுதான் இயற்கை.

இதுகாறும் வரைந்தவற்றால் கல்வியென்பது நமக்கு முன்னே வாழ்ந்து சென்றவர்கள் கண்ட அனுபவ முடிவென்பதும், அதனைப் பின்னால் வாழ இருக்கின்றவருக்கு அறிவுறுத்திவந்தனரென்பதும், இந்த இயல்பு மற்ற உயிரினங்கட்கு இல்லையென்பதும், அப்படி இல்லாததால் அவை முன்னேறவில்லை என்பதும் மனிதன் இதனைப் பெற்றிருப்பதால், உலகம், உலகில் வாழும் உயிர்ப் பொருள்கள், உயிரல் பொருள்கள் யாவற்றையும் தன்வயமாக்கி விட்டானென்பதும் விளக்கப்பட்டன.

## கல்வியின் இன்றியமையாமை.

மனித வாழ்வின் மலர்ச்சி முன்னோரும் இப்போது வாழ்கின்றவருமாகிய மக்களின் அநுபவ முடிவுகளாகிய கல்வியின் அடிப்படையில் நிற்கின்றதென்பதைக் கண்டோம். இந்த உண்மையை நமது முன்னோர் நன்கு உணர்ந்திருந்தனர். ஆகவேதான் கல்வியை மனித வாழ்வின் ஓரின்றியமையாத பகுதியாக ஆக்கி எல்லோரும் படிக்கவேண்டுமென வற்புறுத்தியுள்ளனர். அவர்கள் வரைந்துள்ளவற்றைப் பார்க்கும்போது, இப்போது

வாழும் நம்மைவிட அவர்கள் கல்வியின் இன்றியமையாமையை உணர்ந்திருந்தனரென்பது புலனாகிறது.

மக்களினத்திற்கே அறம்பாடிய அறிஞரான திருவள்ளுவர் என்ன கூறுகின்றார் என்று பார்ப்போம். மக்களின் இளமைப் பருவம் பார்ப்பவருக்குக் கவர்ச்சியுடையதாயிருக்குமே ஒழிய, நல்ல பயனான பருவமென்று கூறமுடியாது. தக்கன இவை தகாதன இவை என்றுணரும் நிலைத்த உரனில்லாத பருவம். இதனால்தான் வி. ச. காண்டேகரவர்கள் இளமைப் பருவத்தைச் செல்லுலாய்டு பொம்மைக்கு ஒப்பிடுகிறார். எவ்வளவு கவர்ச்சியுடையதாயிருக்குமோ அவ்வளவு ஆபத்தும் அதனிடம் உண்டு. தீப்பொறி பட்டால் உடன் எரிந்து சாம்பலாகிவிடும். இதே மனப்பான்மைதான் இளைஞரிடம் உண்டு. ஆகவே திருவள்ளுவர் இந்த இளமைப் பருவத்தை மதித்து ஒழுக்கம் கூறவில்லை. கல்வியைப் பற்றிக் கூறியது இளைஞருக்குத்தானே என்று வினவலாம். அவர் கருத்துப்படிக் கல்வியென்பது இளைஞர் மட்டும் பயிலக் கூடியதன்று. இளைஞர், காளைப் பருவத்தினர், நடுப்பருவத்தினர், முதியவராகிய அனைவரும் பயிலத்தக்கதென்பதாகும். "யாதானு நாடாமால்" என்று தொடங்கும் குறளில் "என்னொருவன் சாந்துணையும் கல்லாதவாறு" என்று கூறுகின்றார். இதனால் கல்வியென்பது எப்பருவத்தினரும் பயிலத் தக்கதென்பது போதரும். இளம் வயதிற் கல்வி பயிலாமல் காளைப் பருவத்தில் பயிலத் தொடங்கி பெரிய அறிஞரானவர்களும் உண்டு.

ஆகவே திருவள்ளுவர் இளமைப் பருவத்தை விடுத்துக் காளைப் பருவத்திற்கே கடமைகளைக் கூறுகின்றார். அதுதான் இன்பத்துப்பால் என்ற பகுதியாகும். பின்னர் இல்லற நெறியில் வாழ்வோருக்குக் கடமைகளைக் கூறுகின்றார். அடுத்து துறவற நெறியினருக்கானவற்றைக் குறிக்கின்றார். அடுத்து ஒருவன் செய்த வினையின் பயன் செய்தவனையே அடைதலாகிய ஊழின் இயல்பை விளக்குகின்றார். அரசியற் கடமைகள் அடுத்து விளக்கப்படுகின்றன. அரசுக்கு அங்கமாயவைகள் பின்னர் விளக்கப்படுகின்றன. குடிமக்களின் நெறிமுறைகள் இறுதியில் விளக்கப்படுகின்றன.

இவ்வாறாக மக்களின் வாழ்வைப் பகுத்து ஒழுக்கநெறி ஓதிய அறிஞரான வள்ளுவர் கல்விப் பகுதியை அரசியலில் வைத்துள்ளார். இம் மலர்தலையுலகம் மன்னனை உயிராகவுள்ளது. அதாவது நாட்டில் வாழும் மக்களே தன்னுடைய உடலாகவும், அம்மக்களின் உயிரே தன்னுயிராகவும் எண்ணி, அரசன் ஆளவேண்டும். அப்படி ஆளும் மன்னவன் கையில் கல்வியை ஒப்படைத்தார். ஏனென்றால், அரசன்தான் கல்வியுடையனாதலோடு மக்களையும் கல்வியுடையனாக்குவான் என்று எண்ணியமையேயாகும். திருக்குறளின் சிறந்த உரையாசிரியரான பரிமேலழகரும் இக்கருத்தினையே கூறுவர். ஆண்கள் பெண்களாய மக்களினத்திற்குக் கல்வியை இன்றியமையாததாகக் கருதினர் என்பது கல்விப் பகுதியை அரசியலில் வைத்ததனால் போதரும். இப்பொழுது மன்னவன் ஆளும் நிலைமை நம் நாட்டிற்கில்லையாயினும், மக்கள் தலைவரை மன்னவன் (president) போலக் கூறலாம்.

திருவள்ளுவர் தன்னுடைய கருத்துக்களைக் கூற, உள்ளக் கருத்தினளவும் விரிந்து தடையிலாது செல்லும் எளிமையான பெரிய பா வகைகளைக் கொள்ளவில்லை. தன்னுடைய எண்ணங்களைச் சில சொற்களில் விளக்கும் திறனில்லாதவர், பலவாக விரித்துச் சொல்ல விரும்புவர் என்று அவரே கூறியுள்ளார். ஆதலின் அடியளவில் மிகவும் சுருங்கிய பாவாகிய குறட்பாவைக் கருவியாகக் கொண்டு தம்முடைய கருத்துக்களை விரித்துரைக்கின்றார். சிறிய கண்ணாடியானது, வெளியிற் காணும் பல பெரிய பொருள்களைத் தன்னுள்ளே செவ்வையாக அடக்கிக் காட்டுதல் போல, எண்ணிலாக் கருத்துக்கள் இவர் குறட்பாக்களில் அடங்கியுள்ளன. இவ்வாறாகச் சுருக்கமாகக் கூறவேண்டும் என்னும் நோக்கொடு நூலெழுதத் தொடங்கிய வள்ளுவரைக் "கல்வி" சுருக்கவிடாது அகலவரையுமாறு செய்துவிட்டது. உண்மையில் இத்தலைப்பு எத்தகையோராலும் முற்ற விரித்துரைக்க இயலாதது. கல்வியைப் பற்றிய கருத்துக்களை விரிக்க எண்ணின் அது அகலும். தொகுத்துக் கூறுவோமென்று தொடங்கின் அது எஞ்சும் இயல்புடையதாகும். ஆகவே வள்ளுவர் நான்கு அதிகாரங்களில் இச் செய்தியையும் இதனோடு தொடர்பான பிற செய்திகளையும் விவரிக்கின்றார்.

கல்வி என உடன்பாட்டுமுறையானும், கல்லாமையென எதிர் மறை முகத்தானும் இரண்டு அதிகாரங்கள் கூறுகின்றார். அடுத்துக் கல்வியின் மறுகூறாகிய கேள்வியினைக் கூறுகின்றார். இறுதியாக மேலே விவரித்த கல்வி கேள்விகளின் பயனான அறிவுடைமையைக் கூறுகின்றார். மனித வாழ்வுக்கு இது மிகவும் இன்றியமையாதது என்பதற்காகத்தான் கொஞ்சம் விரிவாகக் கூறியுள்ளார். இதனாலும் இதன் சிறப்பு விளங்கா நிற்கும்.

திருவள்ளுவர் "கல்வி" என்னும் அதிகாரத்தில் தொடங்குர் முதற் குறளே அதன் இன்றியமையாமையைக் காட்டுகின்றது. "கற்க கசடறக் கற்பவை" என்ற குறளில் "கற்க" என வினையை முன்வைத்துக் கூறியுள்ளார். தமிழில் பாட்டிலாயினும் வழக்கிலாயினும் ஓருண்மையைக் காணலாம். அந்த உண்மை என்ன? தான் கூறும் கருத்தை விளக்க வினையை முன் வைத்துக் கூறுவதும், பின் வைத்துக் கூறுவதுமாகும். சான்றாக "முருகன் வந்தான்" என்று சொல்லலாம். இதனையே "வந்தான் முருகன்" என்றும் கூறலாம். இலக்கண நூலார் "முருகன் வந்தான்" என்ற தொடரை "முருகன் என்னும் எழுவாய் வந்தான் என்னும் பயனிலை கொண்டு முடிந்ததென்பர். "வந்தான் முருகன் என்றால் வந்தான் என்னும் வினைமுற்று முருகன் என்னும் பெயர்ப் பயனிலையைக் கொண்டு முடிந்ததென்பர். இங்ஙனம் இரண்டு முறையாகக் கூறுவதன் பயன் என்ன? பெயரை முன்வைத்துக் கூறுவதால், சொல்லுபவனுக்கு அவன் செய்த வினையைப் பற்றிய கவலையில்லாமல் பொருளை அறிந்துகொள்ள வேண்டுமென்னும் ஆவல் உள்ளதென்பது புலனாகிறது. வினையை முன் வைத்துக் கூறுவதனால் பொருளைப் பற்றிய கவலையில்லாமல், அவன் செய்த செயலைப் பற்றியே அறிந்துகொள்ள ஆவலுறுகின்றான் என்பது விளங்கும். பெயரை முன்வைத்துக் கூறினால் பொருளை அறிவதும், வினையை முன்வைத்துக் கூறினால் செயலை அறிவதுமே மேற்கூறியதன் பயனாகும். இலக்கண முறையில் கூறும் இவ் விளக்கம் நிற்க.

உலக வழக்கில் பார்க்கும்போது இதனைவிட மேன்மையான கருத்துக்கள் புலனாகின்றன. வினையை முன்வைத்துக்

கூறினல். இன்றியமையாமை, கட்டாயம் விரைவு முதலிய பல பொருள்கள் தெரிகின்றன. தான் வாழும் வீட்டில் பாம்பு வரக் கண்ட ஒருவன், அடுத்தவனை விளித்து 'தம்பி! பாம்பு வந்துவிட்டது; ஆதலின் ஒரு தடி கொண்டுவந்து அதனை அடிப்பாயாக" என்று கூறமாட்டான். ஓடு! ஓடு! அடி! அடி! என்று அலறுவான். புகைவண்டியில் இருவர் செல்லவேண்டி யுளதென்று வைத்துக்கொள்ளுவோம். ஒருவர் வண்டியிலேறி விட்டார். மற்றொருவர் ஏறவில்லை. வண்டி புறப்படுதலை எச்சரிக்கும் ஊதுகுழலின் ஒலியும் கேட்டுவிட்டது. வண்டியும் நகர்கின்றது. இப்பொழுது வண்டியிலுள்ளவன் தம்பி! வண்டி புறப்பட்டுவிட்டது; ஆதலின் விரைவாக வண்டியிலேறு என்று கூறமாட்டான் ஏறு! ஏறு! என்று அலறுவான். இவ்விரண்டு எடுத்துக்காட்டுகளானும் என்ன விளங்குகிறது? அதனை நாம் சிந்திக்கவேண்டும். வினையை முன்னிட்டுக் கூறினல் விரைவுப் பொருளும், இன்றியமையாமைப் பொருளும், கட்டாயப் பொருளும், பிறவும் புலப்படுவதைக் காணுகின்றோம்.

இதே நோக்குடன் திருவள்ளுவர் 'கல்வி' என்னும் அதிகாரத்தில் முதற் குறளின் தொடக்கத்தில் "கற்க" என வினையை முன்னிட்டுக் கூறிய கருத்தைச் சிந்தியுங்கள். மனித வாழ்வுக்கு கல்வி இன்றியமையாதது; கட்டாயம் பயிலவேண்டியது; கல்வி கரையில கற்பவர் நாள் சில ஆதலின் விரைந்து கற்கவேண்டியது; என்று சொல்லக்கூடிய கருத்துக்களை எல்லாம் காணுகின்றோம்.

ஒரு பொருளிடத்து நாம் மிகுதியாகப் பற்று வைப்போமானல், அதனைக் காணவும், பழகவும் மிக்க அவாக்கொள்ளுவோம். அவ்வுணர்ச்சியை வெளிக்குக் காட்ட சில வுவமைகளைக் கூறுகின்றோம். ஒரு தாய் தன் பிள்ளையிடத்து மிக்க பற்றுவைப்பாள். அப்பற்றுணர்ச்சியைக் காட்டி அவள் அப்பிள்ளையைக் கொஞ்சும்போது கண்ணே என்றும், கண்ணினுள் மணியே என்றும் கொஞ்சுவதைக் காணுகின்றோம். ஆகவே உறுப்புக்களில் கண் மிகவும் சிறந்தவை என்பதும் அவைகளைப் போலக் குழந்தையும் சிறந்ததென்பதும் புலனுகின்றன. "கண்ணிற் சிறந்த வுறுப்பில்லை" என்று தஞ்சைவாணன்கோவை

ஆசிரியராகிய பொய்யாமொழிப் புலவரும் கூறுவர். திருவள்ளுவர் கல்வியைப்பற்றிக் கூறும்போது, அறியாதவர் எண் அதாவது கணிதம் என்று கூறுவர், எழுத்தென்று கூறுவர்; ஆனால் அதன் இயல்பை உணர்ந்த பெரியோர் அங்ஙனம் கூறார். பின் எங்ஙனம் கூறுவரெனின், கண்ணென்று கூறுவராம் என்று பாடியுள்ளார். மேலும் கூறும்போது கற்றவனின் முகத்தில் உள்ளவைதாம் கண்கள். கல்லாதவர் முகத்திலுள்ளவை புண்கள் என்று கூறுவர். கல்வியில்லா மனிதன் அழகு மண்ணால் அழகாகச் செய்யப்பட்ட பாவையின் அழகை ஒக்குமென்று கூறுவர். ஆதலின் மக்களை மற்றைய உயிரினங்களினின்றும் வேறுபடுத்திச் சிறப்புக் கொடுத்து நிற்பது கல்வியும், அதனாலாய அறிவும், அறிவாலாய நல்லொழுக்கமும்தாம் என்பவற்றைத் தெள்ளிதினுணர்க.

நாலடியார் போன்ற பிற நூற்களிலும் கல்வியின் பெருமையைக் காணலாம். மனிதனுக்கு அழகு தருவது வகைபடக் கத்தரித்துக் கோதிய குஞ்சியன்று. வெள்ளிச் சரிகையை விரிவாகக் கோத்து நெய்யப்பெற்ற பகட்டான பட்டுடையன்று. பின் மனிதனுக்கு அழகு தருவது யாதென்றால், நல்ல மனத்துடன் கூடிய கல்வியறிவேயாகும். ஏ! தகப்பன்மார்களே! பெரியோர்களே! நீங்கள் உங்கள் பிள்ளைகட்கு எச்சமாக ஏதாவது தேடி வைக்க எண்ணுகின்றீர்களா? அப்படியாயின் கல்விப் பொருளை அவர்கட்குத் தேடி வையுங்கள். ஏனென்றால், மற்றவர்களால் கல்விப் பொருளைக் கொள்ளைகொள்ள முடியாது; மற்றவருக்குச் சொல்லிக்கொடுக்க வளருமேயல்லாமல் குறையாது. படைவலியும் பிறவலியும் கொண்ட பெருமக்கள் கோபித்தாலும் கூடக் கல்வியை ஒன்றும் செய்யமுடியாது. ஆதலின் கல்விப் பொருளைத் தேடி வையுங்கள். இங்ஙனம் மேற்கூறிய கருத்துக்களை நாலடியார் என்னும் நூலில் காணுகின்றோம்.

புறநானூறென்னும் தொகை நூலில் ஆரியப் படைகடந்த நெடுஞ்செழியன் பாடிய பாட்டின் கருத்தும் கல்வியின் இன்றியமையாமையை வற்புறுத்தும். ஒருவன் கல்வியுடைய பெரியோனுக்கு ஏதாவது நேர்ந்தால் அதனைப் போக்கி உதவியாவனா

அல்லது மிக்க பொருள் கொடுத்தாவது, அவருக்குப்பின் தாழ்ந்து நிற்றலில் வெறுப்பில்லாது நின்றுவது கல்வியைக் கற்றுக்கொள்ளவேண்டும். அதுவே மிகவும் நல்லது. ஏனென்றால் அதற்குப் பல காரணங்கள் கூறலாம். உலகத்தில் அன்பு செலுத்துவதில் தாய்க்கிணையானவர் யாவருமில்லை. ஆதலின் அன்புக்கு எல்லை கூறவேண்டுமென்றால் தாயின் அன்பைத்தான் கூறவேண்டும். இதுபற்றியே பெரியபுராண ஆசிரியரான சேக்கிழாரும் "தாய்த் தலை அன்பென்று" கூறுவர். அங்ஙனம் அன்பு செலுத்தும் தாயும் கற்ற பிள்ளை என்றால் அப்பிள்ளையிடத்துப் பற்றாக இருப்பாள். மேலும் ஒரு குடியின்கண் பலர் பிறந்திருக்கலாம். அவர்களுள்ளே மூத்தவனாகவுள்ளவன் வருக வென அரசியலார் அழைக்கமாட்டார். அவர்களுள் அறிவுடையவனையே அரசியலார் அழைப்பர். அதுமட்டுமல்ல அவன் கூறும் வழியில் அரசியலையும் மாற்றியமைப்பர். மேலும் உயர்ந்தவர் தாழ்ந்தவரென்று வேற்றுமை தெரிந்துவிட்டதாகக் கூறப்படும் சாதிவேறுபாடுகளும் கல்விக்குமுன் தலைகாட்டா. தாழ்ந்த சாதியான் என்று கூறப்படுபவன் படித்துவிட்டால், உயர்ந்த சாதியானென எண்ணி இறுமாந்துள்ளவனும் அவன் பின்னே தாழ்ந்து நிற்கவேண்டிய நிலை ஏற்பட்டுவிடும். ஆக மேற்கூறிய காரணங்களால் கல்வியைப் பயில்க என்று அரசனே சங்க நூற்றொகையில் முழங்கியுள்ளான். பின்னர் எழுந்த நீதி நூல்களும் கல்வியை நன்கு வற்புறுத்தியுள்ளன.

இன்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் வாழ்ந்த வள்ளுவரும் பிறரும் கல்வியை எங்ஙனம் வற்புறுத்தியுள்ளாரென்பதை அறிகின்றோம். இவ்வளவு வன்மையாக வற்புறுத்தப்பட்டிருந்தும் நம் நாட்டு மக்களின் கல்வித் தகுதி என்ன? நூற்றுக்குத் தொண்ணூறு பேர் தற்குறிகளாகவுள்ளனர். இந்நிலை எங்ஙனம் வந்தது. இத்தன்மையான மந்த வாழ்வு எப்படி ஏற்பட்டது? இதனைச் சிந்திக்கவேண்டும். இளம் பிள்ளைகளை வளர்க்கும் தாய்மார்போல, நாட்டு மக்கள் நலனில் அக்கறை கொண்டு ஆளும் நல்ல தமிழரசை இழந்தோம், நாடிழந்தோம். நம் நகரங்களையெல்லாம் இழந்தோம் வேற்று மொழி பேசி, வேற்று நாட்டிலிருந்து வந்தவரால் ஆளப்பட்டோம். நம்

நாட்டு அரசனைத் திருமாலின் வடிவாக எண்ணிய எண்ணத்தையே பிறநாட்டு வேந்தனிடத்தும் காட்டினோம். வேற்று நாட்டவனுயிற்றே! இவனை இங்ஙனம் எண்ணலாமா? என்று நம்முடைய மூட மனம் எண்ணவில்லை. அமயம் வாய்த்த போது இந்த ஆணவக்காரன் ஆட்சியை வீழ்த்தவேண்டும் என்ற உரிமையுணர்ச்சி நம் மக்களிடத்துத் தலைகாட்டவில்லை. அடிமை வாழ்வை வியந்தோம். அடிமை வாழ்வில் காதல் கொண்டோம். தீயவற்றைத் தீயது என்று உணர்ந்தாலல்லவா மனிதன் ஒருகாலமல்லாவிட்டாலும், பிறிதொரு காலத்திலாவது திருந்துவான். நல்லவையும் தீயவையும் நன்றாகப் புரியாத அளவுக்குச் சுயநல வெறி மிகுந்துவிட்டது. காட்டிக்கொடுக்கும் கோடரிக்காம்பாக நம்மில் பலர் மாறிவிட்டனர். "வரம்பட்டு ழித்தீயவும் நல்லவாம்" என்றார் கம்பர். அது நம் மக்கள்பால் உண்மையாகிவிட்டது. இந்த மோசமான சூழ்நிலையை நன்குணர்ந்த தேசியக் கவிஞர், பாரதியாரவர்கள் "என்று மடியும் எங்கள் அடிமையில் மோகம்" என்று கூறுவாராயினர். அடிமையில் மோகம் என்றாரே அதனை நோக்குங்கள். நம் மக்கள் நலனில் முழு நோக்கமும்கொண்ட அரசியலமைப்பை இழந்ததால், இவ்வளவு அல்லலுக்கு ஆளானோமென அறிக.

சங்கப் பாடல்களின் தொகுதியில் பல பெண்களும் பாடியுள்ளார்களென அறிகின்றோம். பெருங்குடிப் பெண்டிர் பாப் பாடியதில்கூட வியப்பில்லை. ஆனால் இன்றைக்குக் கூடை முறங் கட்டிகொண்டு தெருவில் திரியும் குறவர் குடியைச்சேர்ந்த குறமகள் இளவெயினி பாடியுள்ளாள் என்றால் நமக்கு மிகவும் வியப்பாக இருக்கின்றது. பாப் பாடுதல் என்பது எளிதானதல்ல. கற்றவர்களெல்லாம் கவிகளாக முடியாது. கவிஞராகும் திரு கருவிலேயே அமையவேண்டும். நாம் இன்று நாட்டில் எத்துணையோ படித்தவர்களைப் பார்க்கின்றோம். பல ஆண்டுகள் வாழ்ந்து முதிர்ந்த அநுபவமும் கல்வியும் உடைய பெருமக்களைக் காணுகின்றோம். ஆனால் கவிஞர் பலராகக் காண்டல் முடியாது. ஆயிரத்துக்கு ஒருவர்கூடக் காண்டல் அரிதாகின்றது. இதனால் கவிஞராவது எளிதல்ல என்பதை உணருகின்றோம். சங்க காலத்தில் மேற்காட்டிய குறமகள் கவிஞராக இருந்தாரென்றால்

அந்நாளின் பெருமையை என்னென்பது? கவிஞர் பாரதிதாசன் கூறுகின்றபடி "ஒலி என்பதெல்லாம் செந்தமிழ் முழக்கமாக இருந்தது. ஒளி என்பதெல்லாம் தமிழ்க் கலைகளாக இருந்தது" அதனால்தான், எத்திறத்தவரும் பாப்புனையும் பண்பினைப் பெற்றிருந்தனர்.

இவ்வளவு எடுத்துக்காட்டுகளும் கூறிக் கல்வியின் இன்றியமையாமையைத் தெரிந்துகொள்ளவேண்டுவதில்லை. தேர்ந்த கல்வியும் ஒழுக்கமும் உடையவர் நம் கண்ணெதிரேயே நன்கு மதிக்கப்படுகின்றனர். பிறந்த நாடு மட்டுமல்ல. உலகமே கல்வியுடையாரைப் போற்றுகின்றது. எந்த நாடும் கல்வியுடையானை வரவேற்கும். எந்த ஊரும் கல்வியுடையானை ஏத்தி வழிபடும். அங்ஙனமிருக்க ஒருவன் சாகும்வரையிலும் கல்வி பயிலாது இருக்கின்றானே! இது என்ன விந்தை? என்னும் வள்ளுவர் கருத்தையும் நினைக்கவேண்டும். கைப் புண்ணிற்குக் கண்ணாடியா? என்பார்கள். அதுபோல நாம் காணும் ஒன்றுக்கு இவ்வளவு சான்றுகள் வேண்டுமா என்று எண்ணலாம். மேற்கோளைக்காட்டிய கருத்து என்ன என்றால்; நம்மைவிட நமது முன்னோர்கள் கல்வியின் பெருமையை உணர்ந்து வற்புறுத்தியுள்ளனர் என்பதை அறிந்துகொள்ளவேயாகும்.

அறிவும் அநுபவமும் இவ்வுலகில் மனிதன் வாழும் ஒவ்வொரு கணந்தோறும் பெருகிக்கொண்டிருக்கின்றன. இன்று கல்வி பயன்படும் முறைவேறு. அன்று கல்வி பயன்பட்ட முறை வேறு. அன்றைய நிலையில் மண்ணின் பெருமையும் விண்ணின் விரிவும், நீரின் நிமிர்வும், மனிதனை மலைக்கவைத்தது. ஓரிடத்திற்குச் செல்லவேண்டுமென்றால் கால் நடையாகவோ அல்லது கட்டை வண்டியிலோதான் செல்லவேண்டும். வெளியிலும் வழிப்பறி செய்வோராலும், விலங்குகளாலும் நேரும் திடீர் இடர்களை வரவேற்கும் நிலைமையில்தான் செல்லவேண்டும். அந்த நாளில் பிறந்த இடமே பெரும்பாலான மக்கட்கு வீட்டுலகமாக இருந்தது. அக்காலத்தும் சிலர் நெடுந்தூரம் சென்று வாணிகம் முதலியன செய்து வந்துள்ளனர்.

கல்வியாலும் அநுபவத்தாலும் இன்றைய மனிதனுக்கு உலகம் சுருங்கிய அளவில் காட்சியளிக்கின்றது. ஒரு காலத்தில்

அச்சத்தையும் ஆயாசத்தையும் கொடுத்த கடலை மனிதன் எளி திற் கடந்து செல்லக் கப்பல் முதலியவற்றைக் கண்டுபிடித்து விட்டான். அடிக்கடி பிறநாட்டவரோடு பழகும் வாய்ப்பு இப் பொழுது மிகுதியும் ஏற்பட்டுள்ளது. அன்றிருந்ததைவிடக் கல்வியின் இன்றியமையாமையை இன்று கணந்தோறும் நாம் உணருகின்றோம். அக்காலங்களில் கல்வி வாழ்விற் சில பகுதி களை மட்டும் தன்னதாகக் கொண்டிருந்தது. ஆனால் இன்று வாழ்வுத்துறைகளெல்லாம் கல்வியின் இன்றியமையாமையைக் கொண்டுள்ளன. அப்போதே கல்வியானது வாழ்வுக்கு இன்றி யமையாததென்பதை நன்குணர்ந்து வற்புறுத்தியுள்ளனர். அவர்களின் எதிர்கால நோக்கின் வன்மையை என்னென்பது!

## கல்வியின் பகுப்பு.

கல்வியின் பகுதிகள் கணக்கிலடங்கா. மக்களுடைய அநுப வங்களும், அறிவும் எங்கெங்கெல்லாம் விரிவடைகின்றனவோ, அத்துறைகள்தோறும் கல்வியும் விரியும். கல்வி கற்களால் கட் டப்பட்ட கோட்டையல்ல. அல்லது நான்குபுறமும் குன்று கண்டன்ன கரைகளையுடைய குளமுமல்ல. இருந்த அளவி லேயே இருக்காது. அது வற்றாத ஊற்றுக் கண்களால் நாடோ றும் பெருகிச் செல்லும் பான்மையுடையது "கல்வி கரையில கற்பவர் நாள் சில" என்னும் நாலடியின் கருத்தும் ஈண்டு எண்ணுதல் தகும். ஆயினும் கல்வியைப் பெரும் பகுதியாக ஓரளவு பகுத்துவிடலாம். திருவள்ளுவர் கல்வியை இரண்டு பகுப்பாக பகுப்பர். அவை யாவை? அவைதான் எண்ணும் எழுத்துமாகும். ஈண்டு எண் என்றது கணிதம். எழுத்தென் றது இலக்கண இலக்கியங்களாகிய நூற்களாகும். மேனாட்டறி ஞர் கல்வியை மூன்றாகப் பகுப்பர்.

(தொடரும்)

# கவிதைக் கலையும் கவிஞர்களும்.

கு. சிவமணி, B. A. (Hons.)

வளமான மொழிகொண்ட சமுதாயத்தின் குழந்தைப் பருவத்தில் எழுந்த இலக்கியங்களிற் பெரும்பாலானவை கவிதை வடிவில்தான் உள்ளன. அப்போதைய எழுத்தாளன் ஒவ்வொருவனும் கவிஞனாகத்தானிருக்கவேண்டும். ஏனென்றால் ஒவ்வொரு மொழியின் தொடக்கமும் தெளிவற்ற கவிதையாகத் தானிருக்கின்றது. கவிதைக் கலையென்பது கற்பனையும் உணர்ச்சியும் கலந்த ஒரு மொழியாகும், "கற்பனையாவது கண்ட பொருட்களை அவை இயற்கையாக இருக்கும் நிலையில் அப்படியே சொல்வதன்று. எண்ணங்களாலும், உணர்ச்சிகளாலும் அவைகட்குப் பல்வேறு முடிவற்ற வடிவங்கள் கொடுத்துத் திறமையோடு கூட்டிப் படைக்கப்படுவது" என்று வில்லியம் ஹாஸ்லிட் என்ற அறிஞர் கூறியுள்ளார். இந்த மொழி ஒரு நாட்டாருக்கு, ஓரினத்தாருக்கு, ஒரு மொழி பேசுவோர்க்கு மாத்திரம் உரியதன்று. இஃது ஓர் உலகப் பொதுமொழி.

கவிதை எங்கே இருக்கின்றது என்று வினா எழுப்புவோர் எங்கு இல்லை என்ற ஓர் ஐயுறவைத் தங்கட்குள்ளேயே எழுப்பிச் சற்றுச் சிந்தித்துப் பார்ப்பார்களாயின் அது இல்லாத இடமில்லை என்பதைக் கண்டுகொள்வர். எல்லாப் பொருள்களிலும் கவிதை இருக்கின்றது. ஆனால் அந்தக் கவிதையைப் புரிந்துகொள்வோர் மிகச் சிலரேயாவர். அவர்கள்தான் கவிஞர்கள். பொருள்களில் தாங்கள் கண்டுணர்ந்த கவினைத் தமது கற்பனைத் திறத்தின் துணைகொண்டு, மேலும் பேரழகுடையதாக்கி, இயற்கையின் படைப்புகளையும், மிஞ்சக் கூடிய ஆற்றல் பெற்றவர்கள்தான் சிறந்த கவிஞரெனப் புகழ்பெறுவோர். இதை விடுத்துச் சிலர், கட்டுப்பாட்டிற்குட்பட்டுக் கட்டப்பட்ட வெறுஞ் சொல்லடுக்குகளில்தான் கவிதையிருக்கின்றது என்றெண்ணி அதைப் புத்தகங்களில் தேடிப் பார்க்கின்றனர். கவிதை வெறும் எழுத்துக்களில் தேடிக் காணக் கிடைப்ப

தோன்றன்று. அது உணர்வு வயப்பட்டது. மனதின் வழி நிற்பது. உணர்வோடு நோக்கப்படும் பொருள்களெல்லாம் கவிதை வழிபடுவனவே! இறைந்து கிடக்கும் வைரக் கற்களை எல்லாம் பொறுக்கி மாலையாகக் கோத்து, அணிந்து அழகு பார்க்கவேண்டுமென்ற ஆசை உந்த, வான் வழியை மறைத்திருக்கும் வெண் முகிலாகிய வேலியை விலக்கிக்கொண்டு நிலவென்பாள் அவைகளை எடுக்க ஓடுகின்ருள் என்று சொல்லும்போது யாப்பமைப்பு இல்லாவிடினும் கவிதையுணர்வு பிறக்கின்றது. காண்கின்ற பொருளனைத்தும் கவிதை பேசுகின்றன. அந்தப் பேச்சு கவிஞனின் எண்ணவொளி வீச்சிலே பட்டு மின்னி மிளிர் கின்றபோதுதான் கவிதைக்கலை உருவெடுக்கின்றது.

கவிதைக் கலையை வெறுப்பவர்களும் இருக்கத்தான் செய்கின்றனர். கிரேக்க அறிஞர் பிளாடோ தமது 'குடியரசில்' கவிஞர்களுக்கு இடம் தரவில்லை. "கவிஞர்கள் உண்மைபோன்றதை விளக்குகின்ருர்களே தவிர, உண்மையை உள்ளவாறு அறியாதவர்கள். நல்ல ஆட்சி நிலவவேண்டிய நகரத்திலிருந்தும் கவிஞர்களை வெளியேற்றுவது கடமையாகும். இல்லையானல் நகரத்து மக்களை அவர்கள் கெடுத்துவிடக் கூடும். ஒருமனிதன் புகழாலும், செல்வத்தாலும், பதவியாலும் கெடுதல் போல் கவிதையாலும் கெடுவதற்கு இடமிருக்கின்றது." என்றெல்லாம் அதில் குறிப்பிட்டுள்ளார். இவருடைய கூற்றைப் பற்பல அறிஞர்களும் மறுத்துள்ளனர். "பிளாடோ கவிஞர்களைத் தன் குடியரசிலிருந்து வெளியேற்றியுள்ளார். இல்லையேல் அவர்களின் இயற்கை மனிதனைப் பற்றிய விளக்கங்கள், உணர்வும் அன்பும் இல்லாதிருக்கக் கூடிய, எந்தப் பொருளாலும் சிரிக்கவோ அல்லது அழவோ, வருந்தவோ அல்லது கோபமுறவோ கீழே தள்ளப்படவோ அல்லது மிக்க உணர்ச்சிவயப்படவோ முடியாத அவருடைய கணக்கு மனிதனைக் கெடுத்திருக்கும், இது படைத்தவரின் மூளையில் தவிர ஒருபோதும் இருந்திராத ஒரு நடைபெருத் திட்டம். ஹோமரின் கவிதை உலகம் பிளாட்டோவின் தத்துவக் குடியரசை விட நீண்ட நாட்கள் வாழ்ந்து வந்திருக்கிறது" [1] என்று வில்லியம் ஹாஸ்லிட் என்பார் எழுதியுள்ளார். ஆனல் பிலிப் சிட்னி என்பார் பிளாடோ

வின் கூற்றிற்கு வேறுவகையான விளக்கம் கொடுத்துள்ளார். பிளாடோ காலத்தில் வாழ்ந்த கவிஞர்கள் கடவுளைப் பற்றித் தவறான கருத்துக்களையும், கதைகளையும் பாப்பினதைக் கண்டு அவர்கள்மேல் அவர் குற்றங்கண்டார். அந்தக் கருத்துக்களால் இளைஞர்களின் ஒழுக்கம் கெடக்கூடாதென்று எண்ணினார். ஆனால் அப்போதிருந்த கவிஞர்களையும் குறைகூறமுடியாது. ஏனென்றால் அவர்கட்கு முன்பே தூண்டிவிடப்பட்ட கருத்துக்களைத்தான் அவர்கள் பின்பற்றி எழுதினர், அவர்கள்மேல் ஏற்பட்ட பெருவெறுப்பால்தான் கவிஞர்களே தனது குடியரசில் கூடாதென்று பிளாடோ கூறியுள்ளார். என்ற கருத்துத் தோன்ற சிட்னி சொல்லியுள்ளார் மேலும் "பிளாட்டோ தன்னுடைய இயோன் என்ற பேச்சிலே கவிதைக் கலைக்கு உயரிய, சரியான, தெய்விகத் தன்மை பொருந்திய புகழ்ச்சியைக் கொடுத்துள்ளார்,[2] என்று சிட்னி எழுதியதும் இங்கு குறிப்பிடத் தக்கது. ஆங்கிலக் கவிஞர் ஷெல்லி என்பார் 'பிளாடோவே ஒரு சிறந்த கவிஞர் மிகவும் ஆழ்ந்து செல்கின்ற அவரது கற்பனையின் உண்மையும் அழகும், அவருடைய மொழி இனிமையும் கொண்டு அவரைக் கவிஞர் என்று கூற முடிகின்றது. என்று கவிஞர்களை வெறுத்தொதுக்கியவரையே கவிஞர் என வரைந்துள்ளார். கோஷன் என்பார் 'கவிதைக்

1. "Plato banished the poets from his commonwealth, lest their descriptions of the natural man should spoil his mathematical man, who was to be without passions and affections—who was neither to laugh nor weep, to feel sorrow nor anger, to be cast down nor elated by anything. This was a chimera, however, which never existed but in the brain of the inventor, and Homer's poetical world has outlived Plato's philosophical republic "—William Hazlitt.
2. "Plato, in his dialogue called 'Ion' giveth high and rightly divine commendation to poetry "— Sir Philip Sidney.
3. "Vizard of Vanity, wantoness and folly "—Gosson.
4. "The mother of lies and the nurse of absuse "

கலை என்பது ஆடம்பரத்தின் நெறியற்றோரின், முட்டாள்தனத்தின் முகமூடி" [3] என்று அதை வெறுத்தொதுக்கினர். பிலிப் சிட்னி என்பார் அதைப் "பொய்கட்கெல்லாம் தாய் தீயவழியில் செலுத்தும் செவிலி" [4] என்றுள்ளார்.

கவிதையை வெறுப்போர் மிகச் சிலர். ஆனால் அதன் சுவையில் ஈடுபட்டுத் தங்கள் நெஞ்சம் பறிகொடுத்தோர் பற்பலர். "கவிஞர்கள் ஏற்றுக்கொள்ளப்படாத உலகச் சட்டமியற்றுவோர்" என்று ஷெல்லி சொல்வதிலிருந்து கவிஞர்களின் பெருமை நன்கு விளங்கும். தமிழர்கள் அன்றுதொட்டு இன்றுவரை கவிதைக் கலையைப் பேணி வளர்த்தவர்கள். கவிதையை விரும்பி ஏற்று வியந்து பாராட்டிய தமிழர்களைத்தான் காணமுடியுமே தவிர அதை வெறுத்தவர்களைப் பெரும்பாலும் காணமுடியாது. கவிதைக்கலை எங்கெல்லாம் ஒளிர்கின்றதோ அங்கெல்லாம் நாடி ஓடி அதன் உண்மைச் சிறப்பைப் பாராட்டுபவர்கள் தமிழர்கள். பண்டைக் கழகங்கள் ஈன்றெடுத்த பழந் தமிழிலக்கியங்கள், இசை ஏடுகள், தொகை நூற்கள் இவைகளிலே உள்ளம் ஒன்றுதார் யார்? ஆழ்வார் நாயன்மார்கள் பாடிய அழகு தமிழ்ப் பாக்களிலே மனம் பற்றுதார் எவர்? எண்ணிறந்த உலாக்கள், தூதுகள், மாலைகள், கோவைகள், பள்ளுகள், குறவஞ்சிகள் போன்ற பற்பல சிற்றிலக்கியங்களை விரும்பாதார் எத்தனைபேர்? எண்ணத்திற்கெட்டாத அந்நாளில் பெயரறிய முடியாத புலவர் பெருமக்கள் முதல் நம்மிடையே வாழும் கவியரசர் பாரதிதாசன் வரையுள்ள எல்லோரின் கவிதைகளையும், தமிழகம் ஏற்றிப்போற்றி அவைகளுக்குரிய மதிப்பை அளித்து வந்திருக்கின்றது. இல்லையேல்,

"நாலுமிரண்டும் சொல்லிற் குறுதி"
"திருவாசகத்திற்கு உருகார் ஒரு வாசகத்திற்கும் உருகார்"
"பரணிக்கோர் செயங் கொண்டான்"
"வெண்பாவிற்குப் புகழேந்தி"
"விருத்த மெனும் ஒண்பாவிற்குயர் கம்பன்"
"கோவை உலா அந்தாதிக்கு ஒட்டக் கூத்தன்"

"கம்பனைப்போல் வள்ளுவர்போல் இளங்கோவைப்
போல் பூமிதனில்
யாங்கணுமே பிறந்ததில்லை உண்மை வெறும்
புகழ்ச்சியில்லை"

"வள்ளுவர்செய் திருக்குறளை மறுவற நன்குணர்ந்
தோர்கள்
உள்ளுவரோ மனுவாதி ஒரு குலத்துக் கொருநீதி"

'தமிழுக்குத் தொண்டுசெய்வோன் சாவ தில்லை
தமிழ்த்தொண்டன் பாரதிதான் செத்த துண்டோ?'

'தூங்கிய தமிழர் வாழ்வில் தமிழ்க்கனல்
தூண்டிய ஒளிசேர் கவிதை வேந்தன்!
அறியா மையெனும் நீடிருள் நீக்கி
அறிவொளி பரப்பப் பாடும் ஞாயிறு!
விருந்தாம் கவிதை வெள்ளம் பொழிந்தே
அருந்தமிழ் காக்கும் பாரதி தாசன்,'

என்றிவைபோன்ற பற்பல மொழிகளும் எழ முடியுமா?

இவையனைத்தும் தமிழர்கட்குக் கவிதைக் கலையிடத்தே யுள்ள பெருமதிப்பையும் ஆர்வத்தையும் ஈடுபாட்டையும் காட்டு கின்றன. கவிதைக் கலையுணர்வு தமிழர்கட்கு இன்று நேற்று கிடைத்ததன்று. வாழையடிவாழையாக, தலைமுறை தலைமுறை யாக, பரம்பரை சொத்தாகப் பாதுகாக்கப்பட்டு வருவது. தமிழி லக்கியத்தைக் குறிப்பிட்டுப் பேரறிஞர் மில்லர் சொன்ன கருத்து இங்கு நினைக்கற்பாலது' இந்தியா வேறு எதை வேண்டுமோ விரும்பியிருக்கலாம். செய்யுட் கலையை என்றுமே விரும்பிய தில்லை. இந்தப் பெருங் கண்டத்தின் வேறு எந்தப் பகுதியை யும்விட இது தென்னிந்தியாவினுடைய, சிறப்பாகத் தமிழிலக்கி யத்தினுடைய மிகுந்த உண்மையாகும்".[1]

அகமும் புறமும் ஆக்கிய அருந்தமிழ்க் கவிவாணர்கள் தங் கள் அழியாப் படைப்புகளையெல்லாம் இனிய செய்யுள் வடிவிலே

---

1. Poets are the unacknowledged legislators of the world-
P. B. Shelly.

பாத்துள்ளனர். தமிழர்தம் தொன்மையை, பெருமையை மொழியின் சிறப்பை, இலக்கண வளத்தை, அறத்தோடியைந்த காதல் வாழ்வை, மற்றாரின் வலியடக்கிச் செருக்களத்தே வெற்றிக்கொடி யுயர்த்திய புறப்பொருளை எல்லாம், நலிந்து நிற்கும் தாயகத்தில் வாழ்கின்ற தமிழர்கள், தங்கள் கற்பனைக் கண்ணால் மட்டும் கண்டு மகிழும் வண்ணம், அவர்கட்கு இன்று கிடைக்கும் நூற்களில் பழமையில் முதன்மையானதாகக் கலங்கரை விளக்கம் போல் நின்று ஒளிவீசும் 'ஒல்காப் பெரும்புகழ்' தொல்காப்பியத்தின் விதிகளனைத்தும் செய்யுள் வடிவில்தான் உள்ளன. பண்டை நூற்களெல்லாம் செய்யுளமைப்பிலே இருப்பதைக் கொண்டு அப்போது உரைநடை வழக்கில் இல்லை என்று கொள்வது பொருந்தாது. ஏனெனில், மக்கள், இயற்கையின் படைப்புகளில் தாம் கண்டனவற்றைக் கற்பனையுணர்வோடு கலந்து சாலத்தாலும் அழியாது நிற்கும் பெருங் காப்பியங்கள் ஆக்குகின்ற அளவிற்கு வளர்ந்தபோது, ஒருவர்க்கொருவர் தமது கருத்துக்களைப் பரிமாறிக்கொண்டது நல்ல உரை நடையில்தான். ஆனால் அவர்கள் இலக்கியப் படைப்பிற்கு செய்யுள் வடிவையே தேர்ந்து நின்றனர். ஆழ்ந்த கருத்துக்களைக் குறைந்த சொற்களைக்கொண்டு தெளிவு தோன்றச் சொல்கின்ற திறன் உரை நடையைவிட செய்யுட்கே மிகுதியும் உண்டு. இற்றை நாட்களைப் போலன்றி அந்நாளில் ஓலையும் எழுத்தாணியுமே எண்ணப் பதிப்பிற்குப் பயன்பட்டன நிறைந்த முயற்சியும் குறைந்த பயனுந் தான் எஞ்சி நின்றன. ஒரு இலக்கியத்தை இன்னொருவர் விரும்பிக் கற்க விழைகின்றாரெனின், அவர் மனதில் அதை நிலை பெறச் செய்வதற்கு உரைநடையைவிட செய்யுளே சாலச் சிறந்ததாகும். ஒரு குறிப்பிட்ட பகுதியை நாம் மனதில் கொள்ள விரும்புகின்றோம் என்று வைத்துக்கொள்வோம். அந்தப் பகுதி செய்யுள் வடிவிலே இருப்பின் விரைவாக மனப்பாடம் செய்ய முடிகின்றது. உரைப்பகுதியாக இருந்தால் கொஞ்சம் கடினமாக இருக்கின்றது. மனித இதயம் உரை நடையைவிட செய்யுள் நடைக்கே மிகுதியும் இடமளிக்கின்றது.

1. "Whatever else she may have wanted. India has never wanted Poetry and this is more true of South India (especially of the Tamil literature) than any other part of this vast continent"—Dr Miller.

அறிஞர் பலர், வள்ளுவப் பெருந்தகை சொல்கின்முன், இளங்கோ இசைக்கின்முன், சங்கப் புலவர்கள் சாற்றுகின்றனர், சிந்தாமணி செப்புகின்றது, கம்பன் பாடுகிமுன். என்றெல்லாம் சுட்டிக்காட்டி எழுதுவதையும் பேசுவதையும் பார்க்கின்றேம். இவர்களில் பெரும்பாலோர், அவர்கள் இளமைக் காலத்தில் விரும்பியோ அல்லது தேவை கருதியோ படித்தவைகளை பெரியவர்களானபின்னர் மீண்டும் நினைவிற்குக் கொணர்ந்து அந்த நேரப் பேச்சிற்குப் பயன்படுத்துகின்றனர். அவ்வாறு மேற்கோள் காட்டிப் பேசாதவரைப் பெரும்பாலோர் சிறந்தவரென்று கொள்வதில்லை. செய்யுட்கும் நினைவிற்குமுள்ள தொடர்பைப் பற்றி "செய்யுள், இனிமையும் ஒழுங்கும் அதனிடத்தே கொண்டிருப்பதாலும், அறிவை இயக்குகின்ற நினைவிற்குச் சிறந்ததாக இருப்பதாலும் எந்த மனிதனும் அதற்கு எதிராகப் பேசமுடிகின்றது. நகைப்பிற்குரியதாகத் தானிருக்க முடியும்.[1] என்று அறிஞர் பிலிப் சிட்னி குறிப்பிட்டுள்ளார்.

செய்யுள் நல்ல பண்ணேடு கலந்து இசையாக மலர்ச்சி பெறுமாயின் மனித இதயத்தை மட்டுமன்று, உலகில் உயிருள்ள எல்லாப் பொருள்களையும் தன்பால் இழுக்கின்ற ஆற்றல் பெறுகின்றது. உயிரின் உணர்வை மயக்கித் தன்னேடு ஒன்றிவிடச் செய்கின்றது. பொருள் புரியாத மொழியில் ஒருவர் ஒரு மன்றத்தில் பேசுகின்முர் என்று வைத்துக்கொள்வோம். பெரும்பாலோர் அதை விரும்புவதில்லை. பலர் வெளியிலே எழுந்து வந்துவிடுவோமா என்று நினைக்கின்றனர். சிலர், மரியாதை தெரிந்தவர்களாயிருந்தாலும் பேச்சினிடையே எழுந்தே வந்துவிடுகின்றனர். ஆனல் பேச்சிற்கு மாருக அதே மொழியில் இசையரங்கு நடைபெற்றுல், கேட்போருக்குப் பொருள் புரியாவிடினும் அதை ஓரளவாவது சுவைக்கின்றனர். காரணம் அதன் இசை கேட்போரின் இதயத்தை இழுத்துத் தன்னேடு பிணைத்துவிடுகின்றது. இயற்கையில்கூட இந்த விந்தையை நாம் காணமுடியும். கொண்டலிசை கேட்கப்பெறின், கானமயில் தன் தோகையை விரித்து வானை நோக்கி ஆட ஆரம்பிக்கின்றது. கொடிய நஞ்சினல் உயிர்களைக் கொல்விக்கும் நல்லபாம்பு மகுடியின் இசையில் மயங்கிப் படமெடுத்து இசைக்கேற்ப வளைந்து

நெளிந்து ஆடுகின்றது. இசை கொஞ்சம் தவறினாலும் அது இசைப்போனைக் கொன்றுவிடுகின்றது. 'ஆடற் கலைக்கழகு தேடப்பிறந்த' மாதவி பாடிய கானற் பாணி 'நிலத்தெய்வம் வியப்பெய்த நீணிலத்தார் மனம் மகிழ' அமைந்தது என்பார் இளங்கோவடிகள். தினைப் புனத்தைக் காக்கும் ஓரிள நங்கை, வானகமும் வையகமும் மயங்குமாறு தன்னினிய குரலெடுத்துப் பாட, அதைக் கேட்ட யானை தினையைத் தின்னாமல் தன்னிலை மறந்து இசையிலே ஒன்றி அசையாது நின்றிருந்ததாக நாம் இலக்கியங்களிற் படிக்கின்றோம். இறைவனின் பேரருளை நாடி நின்றவர்கள்கூட தங்கள் வேண்டுகோளை இசைக்கலை மூலமாகத் தான் தெரிவித்துள்ளனர், இயற்கைக்கு மேற்பட்ட நிகழ்ச்சிகளை இசைக்கலை செய்து முடித்ததாக மேல்நாட்டு இலக்கியங்களும் சொல்கின்றன. இவையனைத்தும்கொண்டு ஆய்ந்து பார்த்தால், இசைக்கலைக்கும் உயிர்கட்கும் பிரிக்கமுடியாத ஓரியைபு இயற்கையிலேயே அமைந்துள்ளமை புலனாகும். இசையை அனுபவித்தற்கு முதற்கண் வேண்டப்படுவது உணர்வு. அதன் பின்னர்தான் சொற்கள். தெரிந்த மொழியிலே பாடப்படுகின்ற இசைதான் உயிர்களை முழுதும் தன்பால் இழுக்கின்ற ஆற்றல் பெற முடியும். இசைக்கலை கவிதைக் கலையின் அடிப்படையில் தான் இயங்குகின்றது. ஆகவேதான், "கவிதைக்கலை உலகப் பொதுமொழி" என்று அறிஞர் பலரும் கூறியுள்ளனர்.

(வளரும்)

---

1. 'Verse being in itself sweet and orderly, and being best for memory, the only handle of knowledge, it must be in jest that any man can speak against it'

— Sir Philip Sidney.

10-ஆம் பக்க தொடர்ச்சி.

னுக்குண்டு. வள்ளியின் வாய்ச் சொற்களை முருகன் தலைமீது ஏற்பன். ஒவ்வொரு சொற்குற்ற பொருளுக்கேற்ப நடப்பான். "பணி" என்றால் பணிவான். ஓடு என்றால் ஓடுவான். தேனுந் தினைமாவுந் தெள்ளித் தருவாள். அதனை மிகவும் மகிழ்ந்து வாய் கசிந்துண்பான் முருகன். அவள் மொழியெல்லாம் முருக னுக்குக் கொஞ்சுங்கிளியின் மொழிபோல் இனிக்கும். வள்ளி மாட்டு அதிக மோகங்கொண்டவன். அக்கோலந்தணியாதவன். அதனையே அருணகிரி "பணியாயென வள்ளிபதம் பணியும், தணியா அதிமோக தயாபரனே" என்கிறார்கள். காதலவர் இருவர் ஒருமித்துச் செய்யவேண்டிய செயல்கள் இன்ன இன்ன என்பதையே அவ்விருவரின் செய்கைகள் காட்டாநிற்கும்.

எப்பொழுது தனக்கு வேலை தருவாள் என்று முருகன் காத்திருப்பானும். ஏன்? வள்ளியின் தொண்டையில் தேன் தோய்ந்திருக்குமாம். அதாவது அதிகமாகத் தேன் அருந்து வாள் என்பாரும் உண்டு. தேன் அருந்திய தொண்டையினின் றும் பிறக்குஞ் சொற்கள் எவ்வளவு இனிமையாக இருக்கும் என்பதை அனுபவித்தால் அன்றி நாம் நன்றாக உணரமாட்டோம்.

ஆனால் நாம் அதைப் புறக்கணிக்கமாட்டோம். ஏன் என் றால், நல்லவர்களுடைய சொல் எவ்வளவு அமுதமாகப் பயன் படுகிறதென்பதை நாம் தெரிந்திருக்கிறோம். ஆதலின் முருகப் பெருமானும் வள்ளியின் வாய்ச் சொற்கிழமையை நன்கு நுகர்ந் தவன். ஏங்கி வாயெல்லாந் தண்ணீர் சொட்டச் சொட்ட நிற்பான். வள்ளி வருவாள். ஏதேனும் பணி (வேலை) கொடுப் பாள், சில சொற்கள் கூறுவாள். உடனே முருகன் அடி பணிந்து அவற்றை ஏற்றுச் செய்து வள்ளியை மகிழ்வித்துத் தானும் மகிழ்வான். இதனையே நமது குமரகுருபர அடிகள் தாம் அருளிய செங்கீரைப் பருவத்தில் பின்வருமாறு கூறுகிறார் கள்.

"குற்றேவல் செய்யக் கடைக்கண் பணிக்கெனக்
குறையிரந்தவன் தொண்டைவாய்த்—
தேனூறு கிளவிக்கு வாயூறி நின்றவன்—"

என்ற அடிகளால் மேற்போந்த கருத்து வெளிப்படையாகிறது

இங்கேயும் மற்றெங்கும் சரி முருகன் வள்ளி நாயகியாரை அவ்வளவு சிறப்பாக நேசித்திருத்தலின் காரணத்தைச் சிறிது ஓர்வோமாக.

உலகெங்கும் தாய்வழிபாடே பழைய காலத்தில் தலைசிறந்திருந்தது. பரமசிவன், ஸ்ரீமந்நாராயணன், பிரமன் முதலிய பல மூர்த்திகளும் இறைவியைப் பூசித்திருக்கின்றனர். தாயின் வழிப்பாட்டால் உலகம் செழித்திருந்தது. அதனைக் கண்ணுற்ற அபிராமி பட்டர் யார் யார் உலக மாதாவைப் போற்றி உய்ந்தனர் என்று கூறவிரும்பியே பின்வரும் செய்யுளைத் தருவாராயினர் ;— அதாவது :—

"ஆதித்தன் அம்புலி அங்கி குபேரன் அமரர் தங்கோன்
போதிற் பிரமன் புராரி முராரி பொதியமுனி
காதிற் பொருபடைக் கந்தன் கணபதிக் காமன் முதல்
சாதித்த புண்ணியர் எண்ணியர் போற்றுவர் தையலையே."

இக்காலத்தில் நம் கண்முன் வாழ்ந்து போன பெரியார்கள் பலருள்ளும் ஸ்ரீ ரமணரே தன் தாய்க்கோர் கோயில் கட்டிச் சென்றனர். தாய்வழிபாட்டின் சிறப்பினை நன்கு உணர்த்தவே அவ்வாறு செய்தனர் என்பேன்.

இதனால் பெண் தெய்வப் பணியின் சிறப்பே மிகவும் போற்றத் தக்கதென்க. இக் கருத்தினைப் பல்வேறு புலவர்கள் பல்வேறாகக் கூறியிருக்கின்றார்கள். முத்தியிலும் இறைவியின் திருவருளின்றேல் ஒன்றுங் கிடைக்காது. எனவே கலையமுதச் செல்வங்கூட தேவியின் பிரசாதமாக முடிகிறதென்றே கூறுவேன்.

ஆனால் காலதேச வர்த்தமானமானது பெண்களுக்கு அல்வழியிற் படர்ந்து செல்லுந் தன்மையை நல்கிவிட்டது. அதனால்தான் நவீனப் பெண்களிடையே கற்பெனுந் திண்மையை நாம் காண்பதரிதாகிறது. இச்சிறிய, மிக அற்புதத் தன்மைக்காக, அன்னோர்களை ஒதுக்கியுந் தாழ்த்தியுங் கூறுதிருப்போமாக. வேண்டுமானால் அவர்கள் நம்மைக் கொலை செய்யினுஞ்

சரியே. நாம் பெண்தேவதை வழிபாட்டிற் சிறிதுந் தளர்வுறு திருப்போமாக.

முடிவாக "கலையமுதம்" என்ற இக் கட்டுரையினை முடித்துக்கொள்வதற்கு முன் திருவள்ளுவர், மணிவாசகர், திருமங்கையாழ்வார், ஆய மூவரும் கலையமுதத்தினை எவ்வாறு பெற்று வாழ்ந்தார்கள் என்பதை எடுத்துக்காட்டி முடித்துக்கொள்ளுவேணுக.

திருவள்ளுவர் :—

பிறப்பென்னும் பேதமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்பது அறிவு"

என்று கூறியுள்ளார்.

மணிவாசகர் :—

உருத் தெரியாக் காலத்தே உள்புகுந்து
என் உளம் மன்னிக்,
கருத்திருத்தி ஊன்புக்குக் கருணையினால்
ஆண்டு கொண்ட
திருத்துருத்தி மேயானைத் தித்திக்கும் சிவபதத்தை
*அருத்தியினால் நாயடியேன் அணிகொள்
தில்லை கண்டேனே"

என்று உரக்கக் கூறியிருப்பதைப் பார்ப்போமாக.

திருமங்கை மன்னன் :—

வந்தாய் என்மனம் புகுந்தாய் மன்னி நின்றாய்
நந்தாத கொழுஞ்சுடரே எங்கள் நம்பி
சிந்தா மணியே திருவேங்கட மேய
எந்தாய் இனியான் உனை யென்றும் விடேனே

என்று யாவரும் வியக்கக் கூறியிருப்பதை அறிந்து நடப்போமாக.

---

*அருத்தி—அன்பு.

# "முழக்கம்"

[ வரலாற்றோவியம் ]

கதை—வசனம் "காதலன்"

## காட்சி 1.

### அறிமுகம்.

ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பு, சோழர்கள் உறையூரைத் தலைநகராகக்கொண்டு ஆண்டு வந்தார்கள். அப்பொழுது சோழநாடு கலைகளில் மலிந்து, வாணிபத்தில் வளர்ந்து, செல்வத்தில் சிறந்து, வனப்பாலும் வளத்தாலும் பொலிவுற்று இலங்கியது.

வள்ளன்மையிலும், வலிமையிலும் சிறந்து விளங்கிய சோழ அரசர்களில் இளஞ்சேட்சென்னியும் ஒருவன். சென்னி அரசியல் நெறியிலும், ஆளும் முறையிலும் வல்லவன். பாணர்கள் அவன் புகழைப்பாட விறலியர் ஆடிப் பரிசில் பெற்றனர்.

(சென்னியின் அரச சபையில் பாணன் சென்னியின் புகழ் பாட விறலி ஆடுகிறாள்)

**இளஞ்சேட்சென்னி :-** (ஆட்டம் முடிந்ததும்) விறலியே ! உன் திறமைகண்டு மகிழ்ந்தேன். இந்த ஆணிமுத்துமாலை உன் அழகுடலை அலங்கரிக்கட்டும். (முத்துமாலையைக் கழற்றி விறலிக்கு அன்பளிப்பாகக் கொடுக்கிறான்.)

பாணரே ! உமது இசையில்—இனிய நாத மழையில் நான் நன்றாக நனைந்து மகிழ்ந்தேன். இன்ப உணர்வுகளால் என் இதயம் நிறைந்து வழிந்தது. பாடலின் இனிமைக்கு பதினாயிரம் பொற்காசுகளைப் பரிசிலாக அளிக்கிறேன்.

(பொற்காசுகளின் முடிப்பைத் தங்கத் தட்டில் வைத்து பரிசிலாகத் தருகிறான். பாணன் பரிசைப் பெற்றுக்கொண்டு விறலியோடு செல்கிறான்)

(அமைச்சர்களைப் பார்த்து) அமைச்சர் பெருமக்களே! இன்று ஆய்ந்து முடிவுகட்டவேண்டிய விஷயங்கள் என்னென்ன?

**முதலமைச்சர்** — மன்னவா! மூன்று முக்கியப் பிரச்சனைகள்...

(மந்திரிகளைப் பார்க்கிறார்)

**கல்விமந்திரி :**— வீதிக்கு ஒரு கல்விநிலையம் நிறுவ வேண்டும். அதில் வீரர்களும் இலக்கியம் கற்க அனுமதிக்கவேண்டும்

**நிதி மந்திரி :**— புதிதாக வரிவிதித்து பொருளாதாரத்தைச் சரிகட்டுவதைவிட கலைக்காட்சி அமைத்து காண்பவரிடம் காணிக்கை வசூலிப்பது சிறந்த முறை.

**விவசாய மந்திரி :**— நிலத்தின் விளைவு கலத்தில் குறைவதால் விளைவைப் பெருக்க புதிய வழிகளைக் காணவேண்டும்.

**திருமாவளவன் :**— உரையாடலின் நடுவே முறையில்லாமல் குறுக்கிடுவதற்கு என்னை மன்னிக்கவேண்டும் மன்னவா!

அமைச்சர்கள் கூறிய அத்தனைப் பிரச்சனைகளும் அவசியமானவைகள்தான். ஆனால் அதைவிட முக்கியப் பிரச்சினை— முதலில் செயலாற்ற வேண்டிய பிரச்சினை ஒன்றுள்ளது மன்னவா!

வான் பொய்ப்பினும் தான் பொய்யாக் காவிரி ஆண்டில் சில மாதங்களில் நிறைந்து இரு கரையும் தொட்டு விரைந்து சோழ நாட்டின் எல்லை கண்டதும் இன்பத்தால் பொங்கித் துள்ளி வருகிறாள். துள்ளி வருகின்ற காவிரிக் கன்னியை அள்ளி அணைத்து அவள் வளத்தையெல்லாம் வயல்களில் தேக்க ஒரு கல்லணை தேவை.

போர் இல்லாத காரணத்தால் போதுமான வேலையில்லாமல் இருக்கும் வீரர்களைக்கொண்டு நானே அதைக் கட்டிமுடிக்கத் துணிந்துள்ளேன். அரசரின் அனுமதிக்குக் காத்திருக்கிறேன்.

**சென்னி :**— வேலை தொடங்கலாம். எப்பொழுது துவக்க எண்ணம்?

**வளவன் :—** இந்திர விழாவிற்கு மக்கள் பணி செய்ய தொண்டர்களாகச் சென்ற இரண்டாயிரம் வீரர்களும் திரும்பியதும் துவக்க இருக்கிறேன்.

**சென்னி :—** கல்லணைச் செலவிற்கு கருவூலத்தைத் திறந்து கொள். திருந்தச்செய்.

**முதலமைச்சர் :—** இளவரசர் எங்களுக்கு எதிர்கால மன்னர் இளம் மங்கையர்க்கு எழிலரசர். நாட்டு மக்களின் இதயம் கவர்ந்த கள்வர். காலத்தில் செய்யவேண்டியதைத் தெரிந்து கூறும் அறிவுக் கருவூலம்..................

**வளவன் :—**அமைச்சரே ! உங்கள் அழகான புகழுரையில் மயங்கி ஆனந்தத்தால் சமைந்துவிடமாட்டேன். நேரிடையாகப் புகழ்ந்து என்னைத் தலைகுனியவைக்க எண்ணமா?........... வருகிறேன்.

(சபையில் இருந்து எழுந்து செல்கிறான்.)

---

## காட்சி 2.

(அரண்மனையில் இளஞ்சேட்சென்னி மகாபாரதம் வாசித்துக்கொண்டிருக்கிறான். திருமாவளவன் அரசரின் அறையில் நுழைகிறான்)

**திருமாவளவன் :—** தந்தையே ! வணக்கம் !

**இளஞ்சேட்சென்னி :—** வளவா ! செய்திகள் ஏதேனும் உள்ளதா?

**வளவன் :—** ஆம் தந்தையே ! இந்திர விழாவில் பங்கு கொள்ள தங்கள் அனுமதிபெற வந்தேன்.

**சென்னி :—** நீ இளவரசனாயிற்றே ! இந்திர விழாவில் மக்களோடு இரண்டறக் கலந்து உறவாட உன்னால் முடியுமா?

**வளவன் :—** வீரர்களோடு கலந்து விளையாட்டுக்களில் பங்குகொள்ள சாதாரணப் போர் வீரனைப்போல் வேடந்தரித்துச் செல்லப்போகிறேன்.

**சென்னி :—** சென்றுவா! விளையாட்டுக்களில் கலந்து கொள்ளும்பொழுது வேடம் கலைந்துவிடாமல் பார்த்துக்கொள்.

**வளவன் :—** வருகிறேன் தந்தையே!

(தந்தையை வணங்கிச்சென்று நண்பன் கிள்ளியை அடைகிறான்)

**வளவன் :—** (நண்பன் கிள்ளியைப் பார்த்து) ஏய் கிள்ளி! சாமி வரங்கொடுத்திட்டார். இனி அம்மனிடம் வரம் பெற வேண்டும். அம்மன் வரம் கொடுக்காதே! இதற்கு என்ன செய்யலாம்.

**கிள்ளி :—** உம். செய்யலாம்.

**வளவன் —** என்ன?

**கிள்ளி :—** வரங்கொடுக்கும் வரையில் வாய்பேசாது, வயிற்றுக்கு உண்ணாது தவம் செய்யலாம்.

**வளவன் :—** ஏய் கிள்ளி! உன் மூளையிலே கள்ளிதாண்டா பயிராகும், அகில உலகமெல்லாம் தேடினாலும் கிடைக்காத அப்பழுக்கில்லாத களி மண்ணே உன் மூளை முழுவதும் உருண்டு திரண்டிருக்கிறது.

(இதைக் கேட்டுக்கொண்டு வந்த கிள்ளியின் காதலி எழிலி சிரிக்கிறாள்)

**கிள்ளி :—** இந்தா! இப்ப நீயேன் இங்கே வந்தே?...... சரி! இரு இரு இதோ வந்திட்டேன்.

(வளவனிடம் சென்று) அம்மனின் அருள்பெற ஒரு அழகான வழி.

**வளவன் :—** என்ன?

**கிள்ளி :—** (வளவன் காதோடு ஏதோ சொல்கிறான்) எப்படி?

**வளவன் :—** (கிள்ளியின் அழகான வழிகண்டு வியந்து) ஏய் கிள்ளி! (தலையைச் சுட்டிக்காட்டி) உனக்கு இங்கே

கொஞ்சம்கூட இல்லேடா. உனக்கு இங்கே இருக்கிறது எல்லாமே...

**கிள்ளி :—** (இடைமறித்து) என்னுங்க இது! நான் மந்திரி வேலைக்கு மனுப்போடலாம் எண்ணு இருக்கேன் நீங்க இப்படிச் சொல்லிக்கிட்டே இருக்கிறீங்களே!

**வளவன் :—** நான்மட்டும் என்ன சொல்ல வந்தேன் உனக்கு இங்கே கொஞ்சம்கூட களிமண்ணு இல்லே எல்லாமே மூளை தாண்ணு சொல்லவந்தேன். அதுக்குள்ளே நீதானே அவசரப்படுறே.

**கிள்ளி :—** சரிதாம்போங்க! இந்த அதிகாரிங்க பேச்சே அம்பட்டன் கத்திபோல புரளும்போலேருக்கு. முதல்லே இங்கே இருந்த களிமண்ணு இப்ப கழுவிக்கிட்டா ஓடிப்போச்சு.

**வளவன் :—** சரி! சரி! எழிலி உனக்காக நீண்டநேரமா காத்துக்கிட்டிருக்கா நான் வருகிறேன்.

(வளவன் சென்றதும் கிள்ளி எழிலியை அணுகுகிறான்)

**கிள்ளி :—** களிமண்ணு மூளையிண்ணு சொன்னதும் கட... கடாண்ணு சிரிச்சிட்டியே. இப்ப பார்த்தியா அவரே இங்கே இருக்கிறது அவ்வளவும் மூளையிண்ணு சொல்லிட்டுப் போறாரு. இப்ப உன் அவசரப் புத்தியை நினைச்சு ஒருமுறை அழு.

**எழிலி :—** ஐய!... உன் அழகான மூளைக்கு நான் ஒரு முறை அழணுமாக்கும், சரிதான் போறியா!

**கிள்ளி :—** (எழிலியைப் பார்த்துச் சிரிக்கிறான்) ஹ...ஹ ஹ...ஹா

**எழிலி :—** இந்தா! என்ன என்னைப் பார்த்து ஒரேதறியா சிரிக்கிறே!

**கிள்ளி :—** ஹ...ஹ...ஹா... உன் அழகைப் பார்த்து ஆயுசு முழுக்கச் சிரிச்சுக்கிட்டே இருக்கலாம் போலேருக்கு.

**எழிலி** ஏன்? என் அழகுக்கு என்ன குறைச்சலாம்?

**கிள்ளி :—** அதுதான் உன் பெயரிலேயே தெரியுதே!

**எழிலி :—** ஏன் என் பெயருக்கு என்னவாம்? எழிலீண்ணு அழகிண்ணுதானே அர்த்தம்!

**கிள்ளி :—** அப்படியா அர்த்தம்! ஹ...ஹா...ஹ...ஹா... எங்கே எழிலீங்கிறத்தைப் பதம்பிரி.

**எழிலி :—** எழில் + இ = எழிலி

**கிள்ளி :—** எழில்ண்ணு என்ன அர்த்தம்?

**எழிலி :—** அழகுண்ணு அர்த்தம்

**கிள்ளி :—** அப்ப அழகு ஈண்ணு... அழகு ஈண்ணு இருக்குண்ணு தானே அர்த்தம். ஹ...ஹ...ஹா...

**எழிலி :—** சரிதான்! ஆராய்ச்சி அளவு கடந்துவிட்டாப் பலே இருக்கு. இனிமே நான் இங்கிருந்தா ஆபத்துத்தான். நான் வர்ரேன்.

**கிள்ளி :—** இந்தா! ... இங்கே வாண்ணு (எழிலியைப் பிடித்து இழுத்து கன்னத்தைக் கிள்ளுகிறான்)

**எழிலி :—** என்ன! கன்னத்தைப் பிடிச்சுக் கிள்ளுறே!

**கிள்ளி :—** என் கிளியே! எனக்கு கிள்ளிண்ணுதானேடி பேரு.

---

## காட்சி 3.

(அரசி தோழியோடு வளவனின் மணத்திற்காக இள்வரசிகளின் படங்களைப் பார்க்கிறாள்.)

**அரசி :—** எழிலி! இளவரசிகளின் எழிலோவியங்களை எல்லாம் எடுத்துவா.

**எழிலி :—** (அரசியிடம் ஒவ்வொரு படமாகக் காண்பித்து விளக்கம் கூறுகிறாள்)

இந்தப் பாண்டிய நாட்டுப் பைங்கிளி பல கலைகளில் வல்லவள். காண்பவரின் கருத்தைக் கொள்ளைகொள்ளும் கட்டழகி.

இந்தச் சேரநாட்டுச் செந்தாமரை சிவந்த மேனியாள். சேல் விழியால் ஆண்களைச் செயல் மறக்கச் செய்திடுவாள். ஓவியம் தீட்டியோ, காவியம் பாடியோ இவள் அழகைச் சிறைப்பிடிக்க முடியாது.

இந்தக் கொல்லிமலை இளவரசி—எல்லையில்லா அழகரசி. முல்லை என்று பெயர். வில்லையேந்தும் அழகே இவள் வீரத்திற்குச் சான்று.

**குழலி :—** தேவி! உங்களைக் காண ஒரு வீரர் வந்திருக்கிறார்.

**அரசி :—** அழைத்துவா! (வீரன் அரசியை வணங்குகிறான்) என்ன செய்தி.

**வீரன் :—** தேவி! நான் ஒரு குதிரைவீரன். இந்திரவிழாவில் நடைபெறும் விளையாட்டுகளில் கலந்துகொள்ள எனக்கு மிகவும் ஆவல். என் தாய் அனுமதிதர மறுக்கிறாள்.

**அரசி :—** உன் தாய் மிகவும் கோழை. "தான் ஈன்றெடுத்த மகன் இணையில்லாத வீரன்" என்று கேள்விப்படும் பொழுதுதானே ஒரு தாயின் இதயம் இன்பத்தால் நிறைந்து குளிரும். யார் உன் தாய்?

**வீரன் :—** தாங்கள்தான் தேவி! (வேஷத்தைக் கலைக்கிறான் வளவன்)

**அரசி :—** வளவா! எதற்காக இந்த வேஷம்? அனுமதி தரமாட்டேன் என்பதற்காகவா?

**வளவன் :—** அதற்கில்லை! நான் சாதாரணப் போர் வீரனைப்போல் வேடந் தரித்து விளையாட்டுக்களில் கலந்துகொள்ளப் போகிறேன்.

"வீரன் வேடத்தில் என்னை யாரும் கண்டுகொள்ளாமல் இருப்பார்களா?" என்பதற்கே இப்படி உங்களிடம் சோதனை நடத்தினேன். இனி என்னை யாரும் கண்டுகொள்ள முடியாது.

சென்று வருகிறேன் அம்மா! எனக்கு ஆசிகூறுங்கள்.

**அரசி :—** வெற்றியோடு திரும்பிவா!

---

## காட்சி 4.

(காவிரிப்பூம்பட்டினத்தில் நடக்கும் இந்திர விழாவிற்குக் கொல்லிமலை இளவரசி தன் தோழியோடும் படைவீரர்களோடும் ஆண் வேடத்தில் குதிரையில் செல்லுகிறாள்)

**தோழி :—** இளவரசி! உங்களை இப்பொழுது யாரும் பெண் என்றே நினைக்கமாட்டார்கள்.

உண்மையாகவே நீங்கள் இப்படி அரும்பு மீசையுள்ள அழகான வாலிபனாக இருந்தால் நான் நிச்சயம் உங்களைத்தான் மணந்துகொள்வேன்.

**முல்லை (இளவரசி) :—** நான் உன்னை மணந்துகொள்ள மாட்டேன்.

**தோழி :—** ஏன் இளவரசி?

**முல்லை :—** உன்னை அடக்கியாள என்னால் முடியாதே அதனால்தான்.

(இருவரும் சிரிக்கிறார்கள். அப்பொழுது வளவனும் அவன் நண்பன் கிள்ளியும் மாறு வேடத்தில் குதிரையில் வந்து அவர்களோடு கலந்துகொள்கிறார்கள்.)

**கிள்ளி :—** (வீரர்களைப் பார்த்து) நீங்கள் எந்த நாடு?

**வீரன் :—** கொல்லிமலை.

**வளவன் :—** அதோ இருவர் முன்னால் போகிறார்களே அவர்கள் யார்?

**வீரன் :—** (சிறிது தயங்கி) இருவரும் குதிரைப் படைத் தலைவர்கள்.

(வளவனும் அவன் நண்பன் கிள்ளியும் அவர்களிடம் செல்கிறார்கள்)

(தொடரும்)

Regd No. M. 4192.

## தமிழ்ப் பொழிலின் கையொப்பம்.

| முன்பணம். | உள்நாடு. | | | வெளிநாடு | | |
|---|---|---|---|---|---|---|
| | ரூ. | அ. | பை | ரூ. | அ. | பை. |
| ஆயுள் வரி | ௫௰ | 0 | 0 | ௫௰ | 0 | 0 |
| ஆண்டு வரி | | | | | | |
| சங்க உறுப்பினருக்கு | ௨ | 0 | 0 | ௨ | ௮ | 0 |
| ஏனையோருக்கு | ௩ | 0 | 0 | ௩ | ௮ | 0 |

Edited and Published by Rao Sahib S. Swayamprakasam B. A., B. L., M. L. A. Karanthai Tamil Sangam, Tanjore. Printed by N. Chinniah for T. V. M. Mahalingam at Mahalingam Power Press, 1321, South Rampart, Tanjore.

## உள்ளுறை.

துணர் ௩க. —— மலர் க—கஉ